# மின்னலடிக்கும் ஸூப்பர் ரின் வெண்மை...

## ...இதர, டிட்டர்ஜெண்ட் வில்லை, பார் எதனையும் மிஞ்சும் வெண்மை.

பார்வைக்கு தப்பவே தப்பாத வெண்மை உங்கள் துணிகளுக்கு—வேலை தவறாத ஸூப்பர் ரின் சலவையின் வெண்மையே தனி.

இதர டிட்டர்ஜெண்ட் வில்லை, பார் எதனையும் மிஞ்சுவது ஸூப்பர் ரின் வெண்மை.

காரணம், மிகுந்த வெளுக்கும் சக்தி அடங்கியது ஸூப்பர் ரின்.




**நீங்களே கண்டுகொள்வீர்கள்**

இதை வெளுத்தது வேறுசில டிட்டர்ஜெண்ட பார்



இதை வெளுத்தது ஸூப்பர் ரின்

<u>அதிக</u>
**வெளுப்பூட்டும் சக்தி படைத்தது ஸூப்பர் ரின்.**

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

லிண்டாஸ்-RIN.35-2012 TM

## பாபா குர்பசான்சிங்கின் கொலை

# என்ன விரோதம்? எதற்கு வன்முறை?

ஏப்ரல் 24ந் தேதி வியாழனன்று நிரு குர்பசான் சிங் மத சம்பந்தமான சொற்பொழிவு ஆற்றிவிட்டு டெல்லியில் தமது தங்குமிடமான நிரங்காரி மண்டலுக்குத் திரும்பியபோது சுடப்பட்டுக் கொலை செய்யப்பட்டார். அவரது மெய்க் காப்பாளரான பிரதாப் சிங்கும் தமது குருவைக் காப்பாற்றப் போய்க் குண்டுக்கு இரையாகி உயிர் துறந்தார்.

கொலையாளிகள் நிரங்காரி மண்டலின் பின்புறமாக ஒரு குழாயைப் பிடித்து இறங்கி காரில் தப்பியோடிவிட்டனர். டெல்லி போலீஸ் புலன் விசாரித்து வருகிறது.

ஏன் இந்த வன்முறைச் சம்பவம்? சீக்கியர்களுக்கும் நிரங்காரிகளுக்கும் இடையில் என்ன விரோதம்?

சீக்கிய மதத்தின் பத்தாவது குருவான குரு கோவிந்த சிங் அவர்கள் தாம்தான் சீக்கிய மதத்தின் கடைசி குரு என்றும், தமது மரணத்துக்குப் பிறகு சீக்கியர்கள் தங்களது மத நூலான கிரந்தத்தைக் குருவாகப் பாவித்து அதில் கூறியுள்ளபடி நடக்க வேண்டும் என்றும் ஆணை பிறப்பித்தார். தமக்குப் பிறகு சீக்கியர்கள் மானுடவழிபாடு செய்வதை அவர் விரும்பவில்லை.

ஆனால், காலப் போக்கில் குரு கிரந்தத்தில் கூறப்பட்டுள்ள கோட்பாடுகளை முழுமையாக ஏற்றுக் கொள்ளாத சீக்கியப் பிரிவினர் 'நிரங்காரிகள்' அமைப்புத் தோன்றக் காரணம் ஆயினர். நிரங்காரிகள் அமைப்பை பாபா தயாள் என்பவர் தோற்றுவித்தார். இந்தப் புதிய அமைப்பின் சில பிளஸ் பாயின்டுகள் - நிரங்காரிகள் மது அருந்தக் கூடாது, புகை பிடிக்கக் கூடாது, புலால் உண்ணக்கூடாது என்ற கட்டுப்பாடுகள்.

அதிகமான சண்டை சச்சரவுகள் சீக்கியர்களுக்கும் நிரங்காரிகளுக்கும் இல்லாமல்தான் இருந்தது. பாபா குர்பசான் சிங்கின் தந்தையான அவ்தார் சிங் நிரங்காரிகளின் தலைவரான பிறகுதான் இரு வகுப்பினரிடையேயும் விரிசல் அதிகமாகத் தொடங்கியது.

குரு கோவிந்த சிங்குக்கு அடுத்த குரு தான்தான் என்று பாபா குர்பசான் சிங் பிரகடனப்படுத்திக் கொண்டது இவ்விரிசலைப் பகைமையாக்க உதவியது.

1978ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 13ம் தேதி, சிக்கிஸம் தோன்றிய நாளான 'பைசாகி' தினத்தைக் கொண்டாட அம்ருதசரஸ் தங்க ஆலயத்தில் சீக்கியர்கள் கூடியிருந்த சமயத்தில் அருகிலிருந்த ஒரு திடலில் பாபா குர்பசான் சிங் தலைமையில் நிரங்காரிகளும் கூடியிருந்தனர்.

அச்சமயம் இரு வகுப்பினரிடையேயும் பெருத்த மோதல் ஏற்பட்டு 13 சீக்கியர்களும், 5 நிரங்காரிகளும் உயிர் இழந்தனர்.

சில மாதங்களில் கான்பூரில் இரு வகுப்பினரிடையே மறுபடியும் மோதல். 15 பேர் உயிரிழந்தனர்.

பிரகாஷ் சிங் பாதல் தலைமையிலான அகாலி அரசு பாபா குர்பசான் சிங் பஞ்சாபிற்குள் நுழைவதற்குத் தடை விதித்தது. பாபா குர்பசான் சிங் சுப்ரீம் கோர்ட்டில் இதனை எதிர்த்து வழக்காடினார். தடையை நீக்கிய சுப்ரீம் கோர்ட் பஞ்சாபில் சுமுகமான ஒரு சூழ்நிலையை ஏற்படுத்தி பாபா குர்பசான் சிங் மத சம்பந்தமான பிரசாரங்களினின்று தாமாகவே சற்று விலகி இருக்கும்படி கேட்டுக்கொண்டது.

'கடந்த ஐந்து வருடங்களில் பாபாவைக் கொல்வதற்காக ஐந்து முயற்சிகள் நடந்தன' என்று குர்பசான் சிங்கின் மனைவி பாபாவின் மறைவுக்குப் பின் அறிவித்துள்ளார்.

'பொறுத்திருந்து பார்க்கவும், சீக்கியர்கள் வெகுண்டு எழுந்துள்ளனர். இன்று அல்லது நாளை அது நிகழும்' என்று எழுதப்பட்ட ஓர் எச்சரிக்கை நிரங்காரி மண்டலுக்கு பாபா குர்பசான் சிங் கொலை செய்யப்பட்ட அன்று தபாலில் வந்ததை அடுத்து பாபாவுக்கு அதிக போலீஸ் பாதுகாப்புக் கோரப்பட்டது. அப்பாதுகாப்பு அளித்தும் போலீசாரால் பாபாவின் கொலையைத் தடுக்க முடியவில்லை!

-பி. ரங்கநாயகி



**எந்த** ஸ்லிங் ஃபேன்
ஃபேன்களில் சிறந்தது?

**எந்த** ஸ்லிங் ஃபேன்
நான்கு வித குளிர்ச்சி மிகு வண்ணங்களில் கிடைக்கிறது?

**எந்த** ஸ்லிங் ஃபேன்
வாடிக்கையாளர்களிடத்திலும், வியாபாரிகளிடத்திலும் நன் மதிப்பைப்பெற்றது?

**எந்த** ஸ்லிங் ஃபேன்
மின்சாரத்தை மிகக் குறைவாக உபயோகிக்கிறது?

...நிச்சயமாக

# வெஸ்டெர்லி

ஒரு 'டெக்னோகிராட்ஸ் கம்பெனி பி. லிட்.,
சென்னை 600 058' தயாரிப்பு

national 742



## பார்த்தாஸ் டெக்ஸ்டைல்ஸ்

உங்கள் ஜவுளி தேவைகளுக்கு
தென்னகத்தின் தலைசிறந்த
ஜவுளி ஸ்தாபனம்

**பார்த்தாஸ்**
நாகர்கோவில்

கோட்டையம், எர்ணாகுளம்,
சங்கனாச்சேரி, ஆற்றிங்கல்,
காயங்குளம் & K.L.R. பாம்பே

Mgd. by
M. Srinivasa Reddiar



## எண்ணமெல்லாம் இனித்திடுதே!
## இதயமெல்லாம் களித்திடுதே!

வண்ணக் கோலங்கள் அள்ளித்தெளித்து
வரும் காஞ்சி சில்க் அழகு • கண்டு!
காஞ்சி சில்க் பட்டுச் சேலைகள் கலை
நயமுடையவை! விலை நியாயமானவை!
நீடித்து உழைப்பவை! நிறைவு தருபவை!
இன்னும் நவீன மில் துணி வகைகள்!
நயமான கைத்தறி ரகங்கள்!

# காஞ்சி சில்க் பேலஸ்

6/53, பாண்டி பஜார், தி. நகர், சென்னை-600 017

---

எந்த சேலைக்கும் மேட்ச் ஆகும் சோளிகள் எங்களிடம் உண்டு.
எந்த சோளிக்கும் மேட்ச் ஆகும் ஸ்லீவ்ஸ் ஏராளம் உண்டு.

RAJATHI

# எலெக்ஷன் ஜோக்ஸ்!

"V" CERTIFICATE

VOTERS ONLY!


















"என்ன சௌக்கியமா?"

"பலே 'கை'காரரய்யா நீ! சௌக்யமான்னு 'கை' நீட்டிக் கேக்கும்போதே புரியுதே! இதோ 'கை'யோட ஓட் போட்டுட்டு வந்துடறேன்!"



"என்னய்யா சட்டையிலே சின்னத்தோடு வோட்டுச் சாவடியிலே..."

"அதோ பாரு!... பெண் சின்னங்கள் எவ்வளவு நிக்குது பாரு.. அதுக்கு என்ன சொல்றே?"







"ஒண்ணு மில்லீங்க... வந்து...வந்து நிக்கார்போலே பள்ளம் விழுந்துடிச்சி..."

"ஏம்பா, பள்ளம் ஏன் தாமரைப் பூவிலே விழணும்?"



அபேட்சகர்: யமதர்மராஜா! எனக்கு ஓட் போட்ட உடனே பண்டாரத்தை அழைச்சுக் கிட்டு போயிடலாம்!

பண்டாரம்: ஐயோ வேண்டாம்! யமதர்மராஜா, வேகமாப் போங்க!



விலைவாசி,
சர்வாதிகாரப் போக்கு
தாலிக்கு
மலிவு விலைத்
தங்கம்
தமிழக
இ-காங்கிரஸ்
தாலிக்குத்
தங்கம்!
இ-காங்கிரஸ்
தேர்தல்
வாக்குறுதி!




வட மாநிலங்களில்
வறட்சியும் பஞ்சமும்!...
இருந்தால் என்ன?
தேர்தல் வளம் உண்டு!
'கை'க்கு
உங்கள்
வாக்கு




1980 மே 25
ரௌத்திரி வைகாசி 12
மலர்: 38 இதழ்: 43



கல்கி



தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள் தாயென்று கும்மியடி பாப்பா - பாரதியார்

# பால் வார்த்தார், பால்கிவாலா

இந்திரா காந்தியின் தேர்தல் வெற்றியைப் பாராட்டுவதற்காக சுப்ரீம் கோர்ட் நீதிபதி பி. என். பகவதி, அவருக்கு எழுதிய கடிதம் நீதிபதிகளிடம் நமக்கிருந்த நம்பிக்கையை ஆட்டம் காணச் செய்துவிட்டது. புகழ் மாலைகளைக் குவித்து இந்திராவை விட்டால் இந்தியாவைக் காக்க யாருமில்லை என்பது போல் வாழ்த்தி விட்டுக் கடைசியில் ஒப்புக்காக நீதித் துறை பற்றிய சில வரிகளையும் அவர் தம் கடிதத்தில் சேர்த்துக் கொண்டார். 'நீதித் துறையில் நாம் இன்னமும் பழங்கால பிரிட்டிஷ் சம்பிரதாயங்களையே பின்பற்றி வருகிறோம்; இதில் சமூக நீதி வழங்க என்னென்ன மாற்றங்களைச் செய்வதென்று கவனிக்க வேண்டும் என்று எழுதினார். ஜஸ்டிஸ் பகவதி, செய்ய வேண்டிய மாற்றங்களையும் அதற்கான காரணங்களையும் பற்றி, சட்டம் - நீதி பற்றிய ஒரு மகாநாட்டில் பேசியிருந்தால் நியாயமே. அத்தகைய மகாநாட்டின் தீர்மானங்களை அரசின் கவனத்துக்குச் சிபாரிசு செய்திருக்கலாம். அவ்வாறின்றி காக்காய் பிடித்து பிரதமருக்கு அவர் எழுதிய கடிதம், நீதித்துறையின் நடுநிலைமை பற்றிய ஐயப்பாட்டையே தோற்றுவித்து விட்டது. ஆயினும் தற்போது சுப்ரீம் கோர்ட் வழங்கியுள்ள ஒரு தீர்ப்பு நமக்கு மறுபடியும் நீதித்துறையிடம் நம்பிக்கை பிறக்கச் செய்துள்ளது.

அரசியல் சாசனத்தில் அதன் நோக்கங்களை விவரிக்கும் பகுதி ஒன்றும் மக்களின் அடிப்படை உரிமைகளை உறுதி செய்யும் பகுதி ஒன்றும் உண்டு. அடிப்படை உரிமைகளில் கை வைக்காமல் நோக்கங்களை அடைய முயல வேண்டும் என்பது இதன் பொருள். ஆனால் இந்திராவோ, 'பழங்களை அடைய மரத்தை வெட்டிச் சாய்க்கிறேன்' என்ற கதையாக சாசனத்தின் நோக்கங்களை அடைவதற்காக அடிப்படை உரிமைகளில் கை வைக்கிறேன்' என்றார். நெருக்கடி நிலைப் பிரகடனம் அமலில் இருந்த போது, 'சாசனத்தின் நோக்கங்களே பிரதானமானவை, அவற்றை அடைய அடிப்படை உரிமைகளை கட்டுப்படுத்தலாம் என்றும்; அடிப்படை உரிமைகள் கட்டுப்படுத்தப் பட்டதாக யாரும் நீதி மன்றத்துக்குப் போக முடியாது எனவும்; அரசியல் சாசனத்தை எப்படி வேணுமானாலும் திருத்த நாடாளு மன்றத்துக்கு முழு உரிமை உண்டு எனவும்' பொல்லாத ஷரத்துக்களை உள்ளடக்கிய 42வது திருத்தத்தை இந்திரா நிறைவேற்றினார்.

இந்தத் திருத்தத்துக்கு எதிராக இப்போது பால்கிவாலா வழக்காடி வெற்றி பெற்றிருக்க வில்லையானால் இந்திரா தம் இஷ்டத்துக்கு ஒரு புதிய அரசியல் சாசனத்தையே உருவாக்கி யிருக்கலாம். அவரைக் கேட்பார் கிடையாது. மூன்றிலிரு பங்கு தலையாட்டி பொம்மைகள் நாடாளுமன்றத்தில் இருக்கும்வரை அவர் அதிகாரம் தூள் பறக்கும்.

இதற்கெல்லாம் இடமின்றி இப்போது சுப்ரீம்கோர்ட் மக்களின் அடிப்படை உரிமைகளை மீண்டும் உறுதி செய்திருக்கிறது; சாசனத்தின் நோக்கங்களை நிறைவேற்ற இவற்றைக் கட்டுப்படுத்த முடியாது என்று கூறியுள்ளது; நீதி மன்றத்துக்குப் போகும் உரிமையை திரும்பவும் வழங்கியுள்ளது; அரசியல் சாசனத்தின் அடிப்படை அமைப்பை மாற்ற நாடாளுமன்றத்துக்கு உரிமை கிடையாது என்று தீர்ப்பு அளித்துள்ளது. இது சுதந்திரத்திலும் ஜனநாயகத்திலும் பற்றுள்ள அனைவரது வயிற்றிலும் பால் வார்த்ததாகிறது. இத்தகைய தீர்ப்பு வழங்கப்படக் காரணமாயிருந்து திறம்பட வாதாடிய பால்கிவாலாவுக்குத் தேசம் நன்றிக் கடன் பட்டிருக்கிறது.

கூடவே ஒரு கவலையும் உருவாகியுள்ளது. இந்தத் தீர்ப்புக்கு எதிராக இன்னும் பெரிய பெஞ்ச் தீர்ப்பு கோரிப் பெறப்போவதாக அரசு அதற்குள் அறிவித்து விட்டது. இதிலிருந்தே இந்திராவின் சர்வாதிகாரப் போக்கு சற்றும் மாறவில்லை என்று தெளிவாகிறது. சுப்ரீம் கோர்ட்டில் நீதிபதிகள் ரிடயர் ஆகும்

போது, காலியான ஸ்தானங்களுக்குக் காக்காய் பிடிக்கும் நீதிபதிகளாக அல்லது அரசியல் சார்புடைய நீதிபதிகளாகப் 'பார்த்து நியமித்துவிட்டுப் பின்னர் பெரிய பெஞ்ச் தீர்ப்பு கோரலாம். ராஜ்ய சபையிலும் இந்திரா எதிர்பார்க்கும் மூன்றில் இரு பங்கு பெரும்பான்மை கிடைத்து விட்டால் பிறகு கேட்கவே வேண்டாம்!

இறுதியில் பார்க்கப் போனால் நம்முடைய உரிமைகளை நாமே தான் விழிப்புடனிருந்து போராடிப் பாதுகாத்துக் கொள்ள வேண்டியவர்களாகிறோம். எத்தனை பால்கிவாலாக்கள் எத்தனை தடவை நம் உரிமைகளைக் காக்க நம் சார்பில் வழக்காட முன் வருவார்கள் என்று எதிர்பார்க்க முடியும்? சந்திரசூட், கைலாசம், குப்தா, அஸ்ட்வாலியா போன்ற நேர்மையானவர்களே நீதிபதிகளாக எப்போதும் அமைவார்கள் என்பதுதான் என்ன நிச்சயம்?

---



## அடுப்புத் தீயா வாணலியா?

தி.மு.க. தேர்தல் அறிக்கையை பிய்த்து உதறியிருக்கிறார் அரங்கநாயகம். 'கோவை விதரம் திருச்சியிலும் பல்கலைக் கழகம் ஆரம்பிக்க ஏற்கனவே அ.தி.மு.க. அரசு திட்டமிட்டு அதற்கு மத்திய அரசின் அனுமதியும் பெற்றாகி விட்டது. அதையே, 'நாங்கள் நிறைவேற்றுவோம்' என்று தி.மு.க. கூறுவதில் என்ன பெருமை இருக்கிறது? அதே போல் அகில உலக தமிழ் மகாநாட்டை செப்டம்பரில் நடத்தவும் அ.தி.மு.க. அரசு ஏற்கனவே ஏற்பாடுகளைக் கவனித்து வந்திருக்கிறது. அதை 'நாங்கள் நடத்துவோம்' என்று தி.மு.க. மார்தட்டுவதில் என்ன பொருள்?' என்றெல்லாம் வினாசியிருக்கிறார்.

'ரொம்ப சரி' என்று அரங்கநாயகம் கூறுவதை ஏற்கும் போதே, 'அ.தி.மு.க. தேர்தல் அறிக்கை மட்டும் என்ன வாழ்கிறதாம்?' என்றுதான் கேட்கத் தோன்றுகிறது. வேலை இல்லா ஏழைகளுக்கு நாளுக்கு ஒரு ரூபாய் இனம்; வேலை இல்லாப் பட்டதாரிகளுக்கு மாதம் 50 ரூபாய் இனம். பிரசவித்த ஏழைத் தாய்மார்களுக்கு மூன்றுமாதங்களுக்கு மாதம் ரூ 50. குழந்தைகளை வேலைக்கு அனுப்புவதற்குப் பதில் பள்ளிக்கு அனுப்பப் பண உதவி. பசியால் வாடுவோருக்கு ரூ 100. ஐந்து கிலோ அரிசி வாங்கும் ஏழைகளுக்கு ஒரு கிலோ அரிசி இனம் என்று இனங்களை வாரி வழங்குகிறது அ.தி.மு.க. அறிக்கை.

ஏழைகளிடம் எல்லாருக்கும் அனுதாபம் உண்டு. ஆனால் அவர்களுக்கு உதவுகிற விதம் இனங்களை வாரி வழங்கி அவர்களை கௌரவப் பிச்சைக்காரர்களாக்குவதல்ல. நல்ல திட்டங்களின் மூலம் பலரக வேலை வாய்ப்புக்களைப் பெருக்கி, பட்டதாரிகளும் ஏழைகளும் சம்பாதித்துத் தங்களுக்குத் தாங்களே உதவிக் கொள்ள வழி செய்ய வேண்டும். இனங்களை வழங்குவது சோம்பலை அதிகரிக்கும். உற்பத்தியின்றிப் பணப் புழக்கம் மட்டும் அதிகரித்தால் விலைவாசிகள் மேலும் உயர்ந்து ஏழைகளை மேலும் அவதிக்குள்ளாக்கும்.

ஏற்கனவே வரிப் பணமெல்லாம் அரசு ஊழியர்களுக்குச் சம்பளமும் இதர சலுகைகளும் வழங்கவே சரியாகி விடுகிறது; அபிவிருத்தித் திட்டங்களுக்குப் பணம் இல்லை. இந்த லட்சணத்தில் மக்களின் வரிப்பணத்தை இப்படி வாரி இறைத்ததால் ஏழைகள் உள்பட அனைவருக்கும் துன்பம்தான் விளையும்.

ஒரு பக்கம் லஞ்ச ஊழலுக்கு கமிஷன் தீர்ப்புகள் பெற்றவர்களின் கூட்டணி, இன்னொரு பக்கம் திறமையற்ற ஆட்சி. 'வாணலியில் வறுபடுகிறாயா அல்லது அடுப்புத் தீயிலேயே விழுகிறாயா?' என்று வாக்காளனைக் கேட்பது போலிருக்கிறது.

'எந்தக் கட்சியோ, அல்லது கட்சியே இல்லையோ, யோக்கியமானவர்களுக்கும் திறமை மிக்கவர்களுக்குமே வாக்கு' என்ற நிலை ஏற்பட வேண்டும். அத்தகையவர்களை வாக்காளருக்கு இனம் காட்டித் தர கட்சி சார்பற்ற அறிஞர்களின் அமைப்பு ஒன்று உருவாக வேண்டும்..... அவர்கள் சிபாரிசுக்கு மக்கள் மதிப்பளிப்பார்களேயானால் பிறகு கட்சிகளே யோக்கியமானவர்களையும் திறமையாளர்களையும் வரவேற்று வேட்பாளர்களாக நிறுத்தி வைக்கும் நிலை தோன்றும் ..... 'என்ன பகல் கனவு காண ஆரம்பித்து விட்டாய்?' என்று நீங்கள் கேட்பது காதில் விழுகிறது!

## ஆஸ்தான விதூஷகர்

மத்திய பிரதேசத்தில் பிரதமரின் தேர்தல் பிரசார சுற்றுப் பயணம் பெரும் தோல்வி கண்டது. அவர் சென்ற இடங்களிலெல்லாம் கூட்டமே இல்லை. ரொம்பவும் கலங்கிப் போன இந்திராவைக் கட்சி நிர்வாகிகள் ஏதேதோ காரணங்கள் கூறிச் சமாதானப் படுத்தினார்கள்.

பிரதமரின் இந்தத் தோல்வியை வெற்றியாக்கிக் காட்ட கங்கணம் கட்டிக் கொண்டு தானோ என்னவோ மத்திய அரசின் ஆஸ்தான விதூஷகர் ஜேத்தி ஒரு காரியம் செய்தார். 'பிரதமர் என்னுடைய மாநிலத்தில் தேர்தல் பிரசாரம் செய்ய வரும்போது நான் பக்கத்தில் இருந்து வரவேற்றேயாக வேண்டும்?' என்று கூறிக் கொண்டு அவர் மத்திய பிரதேச

**செய்திகள் வாசிப்பது, செம்பியன்**

அரசுக்கு சொந்தமான விமானத்தில் டில்லியிலிருந்து இந்தோருக்குப் பறந்தார். இப்படி கட்சிக் காரியத்துக்காக அரசு விமானத்தையும் தம் அதிகாரத்தையும் துஷ்பிரயோகம் செய்ததன் மூலம் இந்திராவின் ஆளுகையில் கட்சிக்கும் ஆட்சிக்கும் வித்தியாசமில்லை என்பதை மறுபடியும் சந்தேகத்துக்கிடமின்றி நிலைநாட்டியிருக்கிறார் ஸேத்தி. இந்திராவின் சர்வாதிகாரப் போக்குக்கு இது மற்றொரு வெற்றிதானல்லவா?

அதுமட்டுமா? 'சஞ்சய் காந்தியின் நண்பரான தொழிலதிபர் கமல்நாத்தின் தயவு இல்லையெனில் நான் ஒருநாள்கூட மந்திரியாக நீடிக்க முடியாது' என்றும் ஸேத்தி கூறி சஞ்சய் காந்தியின் அதிகார பலத்தின் வெற்றியையும் உணர்த்தி அடிபணிந்திருக்கிறார். பிழைக்கத் தெரிந்த மனிதர்!

**மூன்றரை ரூபாய்க்கு மருத்துவ மனை!**

சென்னை மருத்துவக் கல்லூரியில் துணைப் பேராசிரியராக விளங்கும் டாக்டர் வியாஸ் ஓர் அருமையான காரியம் செய்துள்ளார். தமிழிலே ஒரு மருத்துவ நூல் தயாரித்துள்ளார். அதுவும் கிராமப்புற மக்களை மனத்தில் கொண்டு இதனை உருவாக்கியுள்ளார். அவர்களுக்குச் சாதாரணமாக வரக்கூடிய வியாதிகள், நேரக்கூடிய விபத்துக்களைப் பட்டியல் போட்டு, முதலுதவி சிகிச்சை, பிறகு தீவிர சிகிச்சை இரண்டும் பற்றிக் கூறியுள்ளார்.

புத்தகம் எளிய தமிழில் சுலபமாகப் புரிந்து கொள்ளும்படி அமைந்திருப்பது டானிக் போல இருக்கிறது. அலோபதி மருத்துவ முறை மட்டுமின்றிக் கிராம மக்கள் தாங்களாகவே செய்து கொள்ளக் கூடிய நாட்டு வைத்திய முறைகளையும் குறிப்பிட்டிருப்பது ஃபீஸ் பற்றிப் பேசாது கொடுத்ததை வாங்கிக் கொள்ளும் டாக்டரைச் சந்தித்தது போல் மகிழ்ச்சி தருகிறது!

நோய் நொடிகளை விட முக்கியமாக அவை வராமல் தடுக்க உதவும் எளிய சத்துணவுகள், சுற்றுப்புறத்தைச் சுகாதாரமாக வைப்பது ஆகியனபற்றியும் கூறுகிறார்.

இன்னும் குடும்பக் கட்டுப்பாடு முறைகள், பற்களைச் சுத்தமாக வைத்துக் கொள்ளும் முறைகளும் அதன் அவசியமும், நோய் கண்டவர்களுக்குப் பத்திய உணவு என்றெல்லாம் ஒன்று விடாமல் முன்யோசனையுடன் எழுதியுள்ளார். ஆடு மாடு கோழிகளுக்கு வரும் சாமானிய நோய்களைக் கூட விட்டு வைக்கவில்லை வியாஸ்!

முன்னுரையில் டாக்டர் வியாஸ் நாட்டு நலப் பணித் திட்டத்தில் ஈடுபட்டுள்ள மருத்துவக் கல்லூரி மாணவ மாணவிகளுக்கு அழைப்பு விடுத்துள்ள போதிலும் இப்புத்தகத்துக்கு ஒவ்வொரு கிராமப் பஞ்சாயத்துமே அழைப்பு விடுத்து மக்களுக்கு விநியோகிக்கலாம்.

கிராமப்புற மருத்துவம் தொகுப்பு: டாக்டர் வியாஸ், நாட்டு நலப் பணித் திட்டம், சென்னை மருத்துவக் கல்லூரி, சென்னை-3. விலை ரூ. 3-50.

# பொல்லாத முரட்டுக் காளை



முதன் முதலாக ஏ.வி.எம் படத்தில் ரஜனிகாந்த்.

பல கிராமியப் படங்களில் இவர் நடித்திருந்தாலும் முதன் முறையாக இப்படத்தில் படம் முழுவதும் வேட்டி சட்டையுடனேயே நடித்திருக்கிறார். முதன் முதலாக இப்படத்தில்தான் இவருக்கு ஜோடி ரதி.

இந்த முதல்கள் போதாதென்று இந்தப் படத்தில் ஓர் ஒற்றைக் கொம்பு காளையும் ஒரு முழு பாத்திரமேற்று நடிக்கிறது.

இப்படிப் பல 'முதல்'களைக் கொண்டு ஏ. வி. எம். தயாரித்து வரும் படம் தான் 'முரட்டுக் காளை'.

பொள்ளாச்சியிலிருந்து 36 கிலோ மீட்டர் தூரமுள்ள 'டாப்ஸ்லிப்' (Top Slip) என்ற மலை உச்சிக்குக் காரில் செல்கிறோம். இச்சிகரம் சுமார் 5000 அடி உயரம். வளைந்து வளைந்து கார் சென்றது. எங்கு நோக்கினும் கண்ணுக்கு இனிய மரங்கள், செடிகள், கொடிகள்தான்.

படப்பிடிப்பிற்குத் தயாராக ஜெய்சங்கர் நின்று கொண்டிருந்தார். ஒரு கட்டு மீசை. கழுத்தில் மைனர் செயின். மஞ்சள் ஜிப்பா. அடுத்து ரஜனிகாந்த் வெள்ளை வேஷ்டி, அழுக்குப் படிந்த சாம்பல் நிற ஜிப்பா அணிந்திருந்தார். இயக்குனர் எஸ். பி.முத்துராமன் ஒளிப்பதிவாளர் பாபு, படப்பிடிப்புக்கு ஆயத்தமாக இருந்தனர்.

மெல்லப் படப் பிடிப்பு ஆரம்பமாயிற்று. சுமலதா ரஜினியிடம் 'அண்ணு நீங்க போகாதிங்க. உங்களைக் கொலை பண்ணக் காத்திட்டிருக்காரு' என்று தன் மழலை மொழியில் கூறியவுடன் ஒரு மரத்தின் பின்னால் மறைந்து கொண்டிருந்த ஜெய்சங்கர், 'ரொம்ப நன்றி சௌந்தர்யம் (சுமலதா) இப்படி உங்க அண்ணனை நீ எனக்குப் பிடிச்சுக் கொடுப்பேன்னு எனக்கு அப்பவே தெரியும்' என்று கையில் துப்பாக்கியுடன் ரஜினிகாந்தைப் பார்த்து மிரட்டுகிறார்

'கட்' என்றார் இயக்குனர் எஸ்.பி. முத்துராமன். வந்து உட்கார்ந்த ஜெய்சங்கரிடம், 'நீங்கள் இப்படத்தில் வில்லனாக நடிக்கிறீர்களாமே?' என்று மெல்ல அவர் வாயைக் கிண்டினேன். 'கதாநாயகன், வில்லன் என்றெல்லாம் நாமே நமக்குள் ஒரு வட்டத்தைப் போட்டுக் கொண்டுதானிருக்கிறோம். என்னைக் கேட்டால் 'பஞ்ச வர்ணக்கிளி' யில் நான் வில்லனாக நடித்துவிட்டேன். ஒவ்வொரு படத்துக்கும்

ON The Spot



※ முரட்டுக்காளையில் ஜெய்சங்கர், ரஜனிகாந்த்.



மாறுபட்ட பாத்திரங்களாக ஏற்றுச் சோபிக்க வேண்டும் என்பதே என் விருப்பம். அதைச் சமீப காலமாக முடிந்த அளவுக்கு நிறை வேற்றிக் கொண்டு வருகிறேன். இந்தப் படத்தில் வேடம் மாறுபட்ட நல்ல வேடமாக இருப்பதால் ஒப்புக் கொண்டேன்' என்றார்.

இடைவேளை வந்தது. கமலதாவுக்கு அவரது தாயார் உணவை ஊட்டிக் கொண் டிருந்தார். உணவு இடைவேளைக்கு முன் எடுத்த காட்சியில் அவள் கத்தியால் குத்தப் பட்டு இறப்பது போலவும் அதன் விளைவால் கை எல்லாம் ரத்தம் தெரிவதற்காக சிவப்புப் பெய்ண்டைக் கொட்டி இருந்தார்கள். ''இரண்டு கையிலும் பெயிண்ட் இருப்பதால் எப்படி சார் என்னால் சாப்பிட முடியும்?'' என்றார் கமலதா.

—சலன்

✠ ரஜனிகாந்த், ரதி, இயக்குனர் எஸ். பி.முத்து ராமன், ஜெய்சங்கர், கமலதா, ரஜனிகாந்த்.





# கடலுக்குள் ஜூலி

புஷ்பா தங்கதுரை



## 21

பால்மர்ஸன் கூர்ந்து பார்த்ததில் யாரும் தென்படவில்லை.

அது பிரமை என்று தெரிந்தது

திரும்பினார். அது என்ன? கழுகா?

ஆமாம்! கழுகுதான்! ஓகோ, சடலத்தைப் பார்த்து விட்டதா?

எலிசாவின் உடல் கறுத்திருந்தது துவண்டிருந்தது.

மெள்ளத் திரும்பினார்.

மணற்பாங்கான இடத்தில் குழி பறித்தார். முதலில் எலிசாவைப் படுக்க விட்டார். ஆண்டவனிடம் பிரார்த்தனை செய்து குழியை மூடினார்.

அதன் பக்கத்திலேயே மற்றொரு குழி பறித்து அருமைப் பிள்ளையின் பெட்டியை அமிழ்த்தினார்.

பிறகு வெறுப்போடு சிரிப்பு வந்தது.

-எனக்கு ஒரு குழி. என்றார்

அதற்குள் ஜூலியைப் பற்றிய நினைவு. அவளுக்குள் இருக்கும் ஏராளத் தங்கத்தைப் பற்றிய நினைப்பு.

ஜூலி மூழ்கிய இடத்தைக் குறிக்க வேண்டுமே!

வருங்காலத்தில் யாராவது அவளைத் தேட நேர்ந்தால்......

பால்மர்ஸன் அவசரமாக மற்றொரு பெட்டியை எடுத்தார்.

---

### அரசியல் வேசிகள்

யானைச் சின்னத்திற்கு
நிச்சயதார்த்தம் செய்தால்
கழுதைச் சின்னத்திற்கு
கழுத்தை நீட்டிவிட்டு
முதலைச் சின்னத்தோடு
முதலிரவு கொண்டாடுபவர்கள்;

-எழிலன்



ஒவ்வொரு டிகிரியும் 60 நிமிடங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. ஒரு நிமிடம் ஒரு நாட்டிகல் மைலுக்குச் சமானம் - கப்பல் கணிதங்கள்.

சம்பகாவின் முனகல் கேட்டது. மல்லிக் ஓடினான். அருகில் மண்டி இட்டான். படகோடு சேர்ந்து காபின் மெல்ல' ஆடியது. உள்ளே பட்டு வெளிச்சம். கண்களை மூடியிருந்தாள் சம்பகா.

—சம்பகா!

மெல்லிதாய் அழைத்தான்.

பல முறை அழைத்தான்.

அவள் கண் திறக்கவில்லை. அம்மா, அப்பா என்றாள். நாகலாபுரீஸ்வரி என்றாள்.

ஜுரம் வீசியது.

இவளைக் கடலுக்குள் கொண்டு போனது தப்போ என்று நினைத்தான்.

ராம்சந்த் பளீரென்று அவன் எண்ணத்தில் அறைந்தான். - எந்தக் காலத்தில் உங்களுக்கெல்லாம் தைரியம் வரப் போகிறது? மேனாட்டிலே பெண்கள் எப்படி இருக்காங்க தெரியாதா? என்று கூச்சல் போட்டான்.

ராம்சந்த்தான் சம்பகாவைக் கடலுள் அழைத்துப்போனதற்குப் பெரிய தூண்டுகோல்.

போர்வையை இழுத்து அவள் மீது போர்த்தி வெளியே வந்தான்.

டிரைவிங் காபினில் ராம்சந்த் இருந்தான். அஸ்டிக்கில் ஈடுபட்டிருந்தான். மல்லிக் வருவதைக் கவனித்து —எப்படி இருக்கா என்றான் ஸ்கிரீனில் பார்த்துக் கொண்டே.

—முனகறா.

—அப்படித்தான் இருப்பா. ட்ரக் கொடுத்திருக்கேன். சரியாயிடும். பயந்திருக்கா. சைகலாஜிகல்....

விநோத விசைகளை ஏற்றி, அணைத்து, சோதனைகள் நிகழ்த்தி, கடைசியில் தலை நிமிர்ந்தான். உதட்டைப் பிதுக்கினான்.

-மல்லிக் என்றான் பெருமூச்சு விட்டு.

மல்லிக் கண்களால் வினவினான்.

—வெறும் கானல் நீரைத்தேடற மாதிரி தான், என்றான் ராம்சந்த்.

-எதைச் சொல்றீங்க?

—ஜூலியைத் தேடறது.

கைகளைத் துடையில் தட்டி அப்பா என்று சோபாவில் வழிந்தான்.

பெரிய ஆயாசமான மூச்சை வழுவ விட்டான்.

மல்லிக்கிற்கு கலக்கம். அவன் ஜீவன் முழுதும் ஜூலியில் இருந்தது. வாழ்க்கையின்

ஜாக்பாட் அது! இத்தனைநாளில் ஏமாற்றங்கள் எத்தனையோ அடைந்து விட்டான். பழங்காலப் புதையல்களைத் தேடி, ஆயிரக் கணக்கில் செலவழித்து விட்டான், எல்லாம் வீண்! வியர்த்தம்! காலணாவுக்குப் பிரயோசனம் இல்லை.

ஜூலியைப் பற்றி அறிந்ததே அதிர்ஷ்டம் என்று நினைத்தான். குருட்டு அதிர்ஷ்டம். கடவுள் அவன் பங்கில் அந்த அதிர்ஷ்டத்தைத் திறக்கிறார் என்று நினைத்தான்.

இல்லாவிடில் உலகில் வேறு யாராவது அறிவதற்கு முன் அவனுக்கு மட்டும் ஜூலியின் இருப்பிடம் தெரிய வருமா?

இப்போது ஜூலியும் கிடைக்க மாட்டாளா?

—ராம்சந்த்! என்ன சொல்றீங்க! ஜூலி கிடைக்க மாட்டாளா?

கிட்டத்தட்ட அழுகையில் கேட்டான்.

ராம்சந்த் கையை வழிய விட்டான்.

—நமக்கும் அதிர்ஷ்டம் வேணும். ஜூலிக்கும் வேணும். கப்பலும் மனுஷங்களை மாதிரித்தான். அதன் கீலே வைக்கிற நேரத்தில் அதன் ஜாதகமும் பிறந்துடுது....

மல்லிக் கண்களில் ஈரம் தொக்கியது.

....ஜூலியின் ஜாதகம் சரியாக இருந்திருக்காது, மல்லிக்! நாம்ப என்ன செய்ய முடியும்?

மல்லிக் பிரமித்து நின்றான்.

—ஜூலி கிடைக்க மாட்டான்னு சொல்றீங்களா? என்றான் ஆதங்கமுடன்.

—அநேகமா அப்படித்தான்.

கம் என்று அடைப்பு மல்லிக்கின் மனத்தில். தனியே இருந்தால் அழுதிருப்பான். இன்னொருத்தர் முன்னால் ஒழுக்கம் காட்டவேண்டியிருந்தது.

-எப்படிச் சொல்றீங்க? என்றான்.

—எட்டுச் சதுர மைல் தேடிட்டோம். கிடைக்கல்லே!

—எட்டு சதுர மைலா?

—ஆமாம், நான் சார்ட் பண்ணிட்டு வந்திருக்கேன். 10.00 டிகிரி வடக்கு. 49.21 டிகிரி கிழக்கு மையமாக வச்சு எட்டு மைல் சுற்றளவு தேடியாச்சு! பதினெட்டு நாள் செலவழிச்சிட்டோம். இனிமே என்ன செய்யறது?

—இன்னும் தேடிப் பார்க்கிறது!

—இன்னுமா? என்று ஆயாசப் புன்னகை காட்டினான் ராம்சந்த். —இனிமே ஜூலியைத் தேடறது வைக்கப் போரில் ஊசியைத் தேடற மாதிரி... ஏராளமாச் செலவழிக்கணும்... நிறைய நாள் எடுக்கணும். முடியுமா?

ராம்சந்த் தன் கால்களைத் தூக்கி சோபாவில் வைத்தான். நீட்டமாகப் படுத்துக் கொண்டான்.

அது முற்றுப்புள்ளியின் அறிகுறி என்று தோன்றியது.

—ராம்சந்த்! என்றான் மல்லிக் கலக்கமாக —ஜூலி நாம்ப தேடின இடத்திலே மூழ்கியிருக்காதா?

—இப்ப தேடிட்டோம். அந்த இடத்திலே ஜூலி இல்லே.

—அப்போ பால்மர்ஸன் குறிச்சது தப்பிதமா?

—அநேகமா அப்படித்தான் இருக்கணும். 140 வருஷத்துக்கு முன்னுலே குறிச்சிருக்கார். அப்போ நுண்ணிய கருவிங்க கிடையாது. வானத்தையும் பூமியையும் வச்சுக் கணக்கிடுவாங்க. அதுவும் வானத்திலே சூரியன், நட்சத்திரம் தெரியலேனு.... அதோகதி!

—மல்லிக் யோசித்தான். — அப்படியே பால்மர்ஸன் தப்பிதம் பண்ணினாலும் சின்ன தப்பிதமாத்தானே இருக்கணும்?

—ஆ ஆர் ரைட்! சார்ட்லே சின்னத் தப்பிதமா இருக்கலாம். ஆனா கடல்லே அது மைல்கணக்கிலே வித்தியாசம் உண்டாக்கிடும். ஒரு மைல் வித்தியாசம் கடலிலே எவ்வளவு பெரிய நீளம் தெரியுமா? கற்பனை பண்ணிப் பாரு.

மல்லிக் இகைத்தான்.

—ராம்சந்த்! என்றான். —அஸ்டிக்கை வச்சு தேடிட்டே போலாம் இல்லையா?

—சொல்றது உண்மைதான். அஸ்டிக் இரண்டு மைல் தூரம் வரை சோதித்துப் பார்க்கும். ஆனா இப்போ உஷ்ணமான நாட்கள். கடல் தண்ணி மேலே சூடா



ரும். கீழே குளிர்ச்சியா இருக்கும். இந்த வித்தியாசமான நீர்ப்பரப்பு அஸ்டிக்கிலே தப்பிதமான சிக்னல் கொடுத்து ஏமாத்திடும். அல்லது ஒரு சின்ன மீன் கூட்டம் போச்சுன்னுக்கூட அஸ்டிக் நமக்குத் தவறான சிக்னல் காட்டிடும். இந்தக் காரணத்திலே தான் நான் இதை நம்பறதில்லே!

—அப்போ என்னதான் செய்யலாம்?

ராம்சந்த் கைகளை நீட்டி அரைச் சோம்பல் முறித்தான்.

—எதுவும் செய்யறதுக்கில்லே. இன்னும் இரண்டு நாள் தேடுவோம். அப்புறம் மூட்டையைக் கட்டுவோம்.

இரண்டு நாட்கள் தேடினார்கள்.

அதிக சக்தியுள்ள டார்ச்சுடன் ராம்சந்த் கடலில் மூழ்கி, தரைப் பிரதேசங்களில் தேடினான்

அஸ்டிக்கையும், எக்கோ ஸவுண்டரையும் அடிக்கடி உபயோகித்தான்.

“உங்களிடம் நான் கடைசியாக வேண்டிக் கொள்வதெல்லாம் தயவுசெய்து எனக்கு டெப்பாஸிட் தொகையாவது திரும்பி வரும்படி ஏற்பாடு செய்யுங்கள்...!” -ராஜேஸ்வரி

உத்தேச இடங்களுக்குப் படகை நகர்த்தி இரண்டு கருவிகளையும் இயக்கி மேடுகளைத் தேடினான்.

சமயங்களில் நீள கேபிள்களைக் கீழே செலுத்தி, பாதாளக் கரண்டி முறையில் தரைகளைச் சுரண்டி எடுத்தான்.

எதற்கும் பலன் கிடைக்கவில்லை. மூன்றாம் நாள் விடிந்ததும், படகை ஒரு கடைசி உத்தேசத்துக்கு எடுத்துச் சென்று நங்கூரம் பாய்ச்சி, அஸ்டிக்கை இயக்கி, மேடு ஒன்றைக் கண்டுபிடித்து, டைவிங் சூட்டில் இறங்கினான் ராம்சந்த்.

—ஆண்டவனைப் பிரார்த்திச்சுக்க, மல்லிக். இந்த முறை 30 நிமிஷம் உள்ளே தேடப் போறேன். ஒரு பெரிய விஸ்தீரணத்தைப் பார்க்கப் போறேன். இதில் ஜூலி இல்லேன்னு நாம்ப கிளம்பறோம். அதோட நம்ப தேடல் ஓவர்! என்றான்.

கைகளை அசைத்துக் கீழே ஆழ்ந்தான்.

மல்லிக்கிற்கு இதயம் துடித்தது. மனசுக்குள் பெரிய தவிப்பு- கடவுளை நினைத்தவாறு காபினுக்குள் நுழைந்தான்.

சம்பகா தேறியிருந்தாள். சாய்மானமாகத் தலைகாணி.

—சம்பகா! என்றான்.

மெலிந்த புன்னகையுடன் திரும்பினாள்: -உங்களுக்கெல்லாம் என்னாலே கஷ்டம்! என்றாள்.

—இல்லே, சம்பகா! நீ இருப்பதே எங்களுக்கு இன்ஸ்பிரேஷன். என்று சொல்லி அவள் கண்ணுக்குள் விழித்தான்.

—எங்களுக்குன்னு?..... என்று சொல்லிச் சின்ன வாயைத் திறந்தாள்.

—எனக்கும், ராம்சந்துக்கும்.

அவள் வெறுமையாகத் திரும்பினாள்.

எனக்கு மட்டும் என்று சொல்லி யிருந்தால் மகிழ்ந்திருப்பாளா என்று மல்லிக் நினைத்தான்.

அவள் வெறுமை அவன் மனத்தைக் குழைத்தது.

சம்பகா மெள்ள எழ முயன்றாள். —ஜூலி கிடைச்சாளா?

மல்லிக் பேசவில்லை. நிசப்தமாக நின்றான்.

அவள் அவன் கண்களை வாசித்துவிட்டாள்

—நான் அதிர்ஷ்டம் கெட்டவள்! என்றாள்.

—உன் அதிர்ஷ்டம் இதுலே ஒண்ணும் செய்யாது; என்றான் மல்லிக்.

அவள் காலைக் கீழே ஊன்றி நின்றாள்.

—நிச்சயம் செய்யும் மல்லிக்! பிறந்ததிலேந்து நான் துரதிர்ஷ்டசாலி. இங்கேயும் அது என்னைத் துரத்தியிருக்கு! ஒருவேளை நான் இல்லாம இருந்தா உங்களுக்கு ஜூலி கிடைச்சிருக்கலாம்.

காபின் சுவரைப் பிடித்து நின்றாள். பாலன்ஸ் வந்துவிட்டது.

—சம்பகா! இதில் என் அதிர்ஷ்டமும் இருக்கு. நானும் ஒரு துரதிர்ஷ்டக்காரன். வாழ்க்கையில் எதை எதையோ தேடி அலுத்து விட்டேன். இது தான் என் கடைசி முயற்சி! இதிலே வெற்றி பெருட்டா திரும்ப என் பேப்பர் விக்கிற தொழிலுக்குப் போயிடுவேன்.

சம்பகா அவனை நேர்த்தியாகப் பார்த்தாள். கண்ணில் சோகம் பற்றி இருந்தது. ராம்சந்த் எங்கே? என்றாள்.

—கடைசி முக்குளிப்புன்னு போயிருக்கார்! வெற்றிக்காகப் பிரார்த்திச்சுக்கோ-

கண்ணை மூடித் திறந்தாள். —பிரார்த்திச்சுட்டேன். இதிலே பலன் கிடைக்கணும்.

—கிடைக்காட்டி திரும்பிப் போய்றோம்.

—அப்புறம்? என்றாள் கலவரத்துடன்.

—எல்லோரும் பிரியறோம்.

அவள்குரல் கலங்க, அவள்கண் கலங்கியது.

வெளியே அலைகளின் மெல்லிய வார்ப்பு ஓசைகள். படகின் இனம் தெரியாத சிணுப்புகள்.

அவள் நடந்தாள். —நான் வெளியே போய்ப் பார்க்கணும்.

தடுமாறிப் படகு ஆட்டத்தில் விழ, மல்லிக் ஒரு தாவலில் தாவி அவளைப் பிடித்தான்.

மெள்ளப் பூப்போல அணைத்துக் கோழ காரப்பெட்டில் அமர்த்தி, ஆசுவாசப் பட விட,

அவள் அவன் கைகளிலிருந்து விடுபட இயலாமல் திடீரென்று அவன் மடிமீது விழுந்தாள்.

விழுந்தவள் குலுங்கி அழ ஆரம்பித்தாள்.

ஒரு குழந்தை போலத் தேம்பல்களில் ஆழ்ந்தாள்.

—சம்பகா, என்றான் அவன். அவள் கூந்தலை மெள்ள வருடினான். சின்ன மெலிந்த கைகளைத் தன் கைகளில் ஏந்தினான். —ஏன் அழறே, அழாதே! என்று பல முறை ஆதிரத்துடன் கூறிச் சமாதானப் படுத்த முயன்றான்.

அவள் நீண்டு விசித்தாள். அடங்க வில்லை. தேம்பிக் கொண்டே கண்ணீர் உகுத்தாள்.

மெள்ள விசிப்புக்கள் குறைந்ததும் அவள் குரல் தெளிவாயிற்று. —மல்லிக்! நான் திரும்ப அனாதையாகிடுவேனோன்னு பயமா இருக்கு! எனக்கு நீங்கள் எல்லாம் திமர்னு கிடைச்சீங்க. நீங்க பிரிஞ்சுட்டா மீண்டும் தனியா, நான் அந்தக் கடல் ஆழத்திலே கூண்டுக்குள்ளே அகப்பட்டது போல அகப்பட்டுடுவேனோ? என்னாலே அதை நினைக்க முடியல்லே, மல்லிக்... என்று விசித்தாள்.

மல்லிக் திகைத்தான்.

-சம்பகா, ஏன் அந்த பயம்? நீ கோழ அகப் பட்டபோது பாதுகாக்க நான் வரல்லியா? உன்னை நாங்க விட்டுட்டோமா? நிச்சயமா இல்லை. அதுவும் நான் உனக்குப் பாதுகாப் பாலே இருப்பேன் சம்பகா! ஏன் பயப்படறே?

அவள் கண்களைச் சிமிர்த்துக்கொண்டு அவ னைப் பார்த்தாள். முகம் பனிச்சென்று இருந்தது.

—நிச்சயமா மல்லிக்? என்றாள்.

—நிச்சயம்.

அவள் அதை அடுத்து ஏதோ சொல்ல வாயெடுத்தாள். சொல்லவில்லை.

அவள் முகக் குறிப்பை அவன் உணர்ந்த தாக நினைத்தான். மெள்ளக் குனிந்தான். கண்களில் கனிந்தான். —கடல்லே மட்டு மில்லே. கரையிலேயும் தான். இப்போ மட்டு மில்லே. எப்பவும்தான். சரிதானா சம்பக!

அங்குலங்களாகக் குனிந்து கேட்க அவள் பதில் சொல்லவில்லை. ஒரு புன்னகை சின்ன ஒளியாக அவள் முகத்தில் ஓடியது.

சிறிது நேரத்தில் அவர்கள் இருவரும் வெளித் தளத்திற்கு வந்தார்கள்.

மேலே கொப்புளங்களைச் சிதற விட்டு ராம்சந்த் நீர் மட்டத்திற்கு வந்தான்.

சொட்டச் சொட்ட ஏணியில் ஏறித் தளத் தில் உட்கார்ந்து அவர்களைப் பார்த்து நீள மூச்சுக்களை விட்டான்.

மல்லிக் திகிலோடு அவனைப் பார்த்ததும்,

ராம்சந்த் இளைத்துக் கொண்டு —ஜூலி இல்லை. தானே திரும்பறேம் என்றான்.

அதிர்ச்சி. (தொடரும்)

# அரசியல்வாதி அருமைராஜன்'



''நீங்க அடிக்கடி கட்சி மாறுவதற்கு, சொந் தமா ஒரு புது கட்சியே ஆரம்பிச்சிடலாமே?...''

''ஆரம்பிச்சிடலாம்தான். பழக்க தோஷத் திலே அப்பவும் கட்சி மாறிட்டேனா...?!''

●

''நீங்க இவ்வளவு பெரிய அரசியல்வாதியா வருவதற்கு உங்க தந்தையின் ஆசீர்வாதம்தான் காரணமா...?''

''ஆமாம். சின்னவயசிலிருந்தே அவர் என்னை உருப்படாம போவேன்னு திட்டிட்டிருப்பார்...!''

●

''ஒரு அரசியல் வாதியைப் பார்த்து 'நீங்க எந் தக் கட்சின்னு' கேட்கக் கூடாது...''

பின்னே எப்படி கேட்கணும்....!''

''இப்ப நீங்க எந்தக் கட்சின்னு கேட்கணும்.!''

●

நீங்க குடி இருக்கிற தெருவை 'அண்ணா வழி'ன்னு பெயர் மாற்றி வெக்கச் சொல்றீங் களே, ஏன்?''

''என்னை யாரும் அண்ணா 'வழி'யில் நடப்ப தில்லேன்னு குறை சொல்ல முடியாது பாருங்க...!''

●

கட்சித் தலைவர்: ''உங்களுக்குத் தேர்தலில் வோட்டுப் போடுவது குறித்து ஆட்சேபனை இல்லே... ஆனால் ஜெயித்தபின் கட்சி தாவ மாட்டீங்களே...?''

அ. ராஜன்: ''என்னுடைய இவ்வளவு பெரிய உடம்பைப் பார்த்துட்டும் இந்தக்கேள்வி கேட்கறீங் களே, நியாயமா?'' - ஊத்துக்கடவு ரவி

## டாக்டர் பேசுகிறார்

# படித்த முட்டாள்கள்!

குடும்பக் கட்டுப்பாடு செய்துகொள்வதை எங்கள் மதம் அனுமதிப்பதில்லை எனச் சிலர் சொல்கின்றனர். மதத்தில் கூறியபடி மனக் கட்டுப்பாடு பழக்கப்படுத்திக் கொண்டால் இந்த மாதிரி பேசுவதில் அர்த்தமுண்டு.

மனைவி உடம்புமிகவும் பலவீனமாக இருந்தாலோ, அவள் இன்னொரு முறை தாய்மை நிலையை அடையக் கூடாது என வைத்தியர் ஆலோசனை கூறியிருந்தாலோ அதற்குக் கணவர் மதிப்பு கொடுப்பது அவசியம். அலட்சியப்படுத்தி மனைவியின் உயிருக்கே ஆபத்து விளைவிப்பது அசட்டுத்தனம்.

மத்திய அரசாங்கத்தில் பணிபுரியும் ஒருவர் என்னிடம் வைத்தியத்துக்கு வருவார். அவருடைய குடும்ப டாக்டர் நான். அந்த மனிதர் மிகவும் நல்லவர். கடவுள் பக்தி மிகுந்தவர். அவருக்கு நான்காவது குழந்தை பிறந்தது. அந்தக் குழந்தையும் அதிக இடைவெளி இல்லாமல்தான் பிறந்திருந்தது.

அவருடைய மனைவி மிகவும் நல்லவள். கணவரிடம் அளவுக்கு மீறிய அன்பும் பாசமும் வைத்திருப்பவள். நல்ல பலசாலியாக இருந்த அவள் அடுத்தடுத்த பிரசவங்களால் மிகவும் நலிந்து போய்விட்டாள்.




அவளுக்கு நான்காவது குழந்தை பிறந்ததும், அவள் கணவரிடம், ''அவள் மிகவும் பலவீனமாக இருக்கிறாள். அவளுடைய இதயம் பலமற்று இருக்கிறது. இனி உங்களுக்குக் குழந்தை பிறக்கக் கூடாது. உங்கள் இருவரில் ஒருவர் குடும்பக் கட்டுப்பாடு ஆபரேஷன் செய்து கொண்டுவிடுவது நல்லது'' என்றேன்.

''அது எங்கள் மதக் கட்டுப்பாட்டுக்குப் புறம்பானது டாக்டர்'' என்றார் அவர்.

''உங்கள் மனைவியின் தேக நிலையை நீங்கள் கவனிக்க வேண்டும். உங்கள் பொறுப்பு அதிகரித்துக் கொண்டே போகிறது. நான்கு குழந்தைகள். இவர்களை வைத்துச் சமாளிப்பது என்ன சாதாரண விஷயமா?'' என்றேன்.

''டாக்டர் ஸார்! இதெல்லாம் என்ன நம் கையிலா இருக்கிறது? நான்கு குழந்தை பெற்றுவிட்டதால் என் மனைவி பலவீனமாகிவிட்டாள் என்று நீங்கள் சொல்கிறீர்கள். என் அம்மாவுக்கு நாங்கள் பன்னிரண்டு பேர் பிறந்தோம். இப்போ எட்டுப் பேர் இருக்கிறோம். எங்கள் அம்மாவும்தான் இருக்கிறார். என் அக்காவுக்கு ஒன்பது குழந்தைகள். என் பெரிய அண்ணாவுக்கு எட்டு. எல்லோரும் நன்றாகத்தானே இருக்கிறார்கள்? பணத்தை வைத்துக் கொண்டு குழந்தைகள் வேண்டும் என்கிறார்களே அவர்களுக்கெல்லாம் குழந்தை பிறக்கிறதா? இதெல்லாம் தெய்வ விருப்பம் டாக்டர்'' என்றார்.

படித்த ஒரு மனிதன், இந்தக் காலத்தில் இப்படிப் பேசுவது எனக்கு ஆச்சரியமாகவே இருந்தது. அம்மாவையும், அக்காவையும் அண்ணியையும் இதற்கா ஒப்பிடுவது? இது அவரவர் தேக பலத்தைப் பொறுத்த விஷயமல்லவா? அந்த மனிதரின் பேச்சு என்னைக் கோபப்படச் செய்தது. ''நாம் முன்யோசனை இல்லாமல் நடந்து கொண்டு தெய்வத்தின் மேல் பழியைப் போடக் கூடாது ஸார். மனைவிக்கு ஏதாவது ஆபத்து என்றால் இத்தனை குழந்தைகளை வைத்துக் கொண்டு நீங்கள் கஷ்டப்படுவீர்கள். எச்சரிக்க வேண்டியது என் கடமை'' என்றேன்.

அடுத்த ஒரு வருடத்துக்கெல்லாம் அவர் மனைவி மீண்டும் பிரசவித்தாள். அதனைத் தாங்க முடியாமல் மாய்ந்தும் போனாள். நான் போன முறை கண்டிப்பாய்ச் சொன்னதால் இந்த முறை வேறு இடத்தில் பிரசவம் பார்த்திருக்கிறார் அந்த மனிதர். பிறந்த குழந்தையை வைத்துக் கொண்டு அவர் படும் அவஸ்தையைக் கேள்விப்பட்டேன்.

''இவர் மனைவி மாண்டது கண்டிப்பாக இவருடைய முட்டாள்தனத்தால்தான். கத்தியால், துப்பாக்கியால் ஒருவரை மாண்டு போகச் செய்தால் அரசாங்கம் தண்டிக்கும். இதெல்லாம் மட்டும் கொலையைச் சேர்ந்தது இல்லையா? இவர் கதையைப் படித்த பிறகாவது பிறர் திருந்தட்டும்!''

டாக்டர்: **ருக்மிணி சௌரிராஜன்**
பேட்டி: **குமிலி ராஜேஸ்வரி**

# அசல் க்ளாக்ஸோஸ்-D*
# ஒன்றே ஒன்றுதான் உண்டு.
# அதனைத் தயாரிப்போர் க்ளாக்ஸோ.




முற்றிலும் நம்பிக்கைக்குரிய தயாரிப்பு க்ளாக்ஸோஸ்-D. வைட்டமின் $D_2$, பாஸ்பரஸ், கால்ஷியம் ஆகியன செறிந்த தூய க்ளுகோஸ் பவுடர் இதில் உள்ளது. உடனடி சக்தி தருவது க்ளாக்ஸோஸ்-D. பல லட்சம் பேர் அருந்துவது இது. க்ளாக்ஸோஸ்-D தயாரிப்போர் க்ளாக்ஸோ நிறுவனத்தினர்— பலவகை உணவுப் பண்டங்களுக்கும், உயிர்காக்கும் மருந்துகளுக்கும் புகழ்பெற்ற நிறுவனம்.

உஷார், மட்டமான போலிகளை நம்பினீரானால், உங்கள் குடும்ப நலனுக்கே பேராபத்தாக முடியும்.

வாங்கும் பேக்கெட் அசல்தானா என பார்த்து வாங்குவீர் க்ளாக்ஸோஸ்-D.

* டிரேட்மார்க்கின் லைசென்ஸ்டு யூஸர்ஸ்.

GFP. 5889-TL

**க்ளாக்ஸோஸ்-D*** —க்ளாக்ஸோ நிறுவனத்தாரின் நம்பகமான க்ளுகோஸ் பவுடர்.

## 7

"வா, ராதா! நாம போகலாம்" என்று ரவி ராதாவை அழைத்துக் கொண்டு போகப் புறப்பட்டான்.

"நீ செய்யிற இந்தக் காரியத்தை விட நான் குடிக்கிறது ஒண்ணும் தப்பில்லேடா, டேய்!" என்று பாலு அவனைப் பின் தொடர்ந்தான்.

ரவிக்கு நிலைமையை எப்படிச் சமாளிப்பது என்றே விளங்க வில்லை. நல்லவேளையாகக் கடற்கரையில் அப்போது அதிகமாக ஜனக் கூட்டம் இல்லையே என்று அவனுக்கு ஒரு வகையில் ஆறுதலாக இருந்தது.

ரவி திரும்பினான்.

"ஏன் அண்ணா, இப்படிக் கலாட்டா செய்யறே? இது கொஞ் சங்கூட நன்னாயில்லே."

"அப்பப்பா.... அண்ணான்னு இப்பவாவது கூப்பிடத் தோணித்தே! நான் கேக்கற கேள்விக்கெல்லாம் பதில் சொல் விட்டு அப்புறம் போடா."

"அண்ணா, வீணா கலாட்டா செய்யாதே, நாலு பேர் கூடிட்டா இப்போ நீ இருக்கிற நிலைமையில, உனக்குத் தான் ஆபத்து. அதனாலே பேசாம உன் ப்ரட்ண்ஸோடப் போய்ச் சேர்ந்துக்கோ. இவ என்னைப் போலவே இன்னொரு பாங்க்லே வேலை செய்யறவ. மரியாதைப்பட்ட மனுஷாள் வீட்டுப் பெண். அப்பாவுக்கு உடம்பு சரியில்லேங்கறதைக் கேட்டு, எப்படி இருக் குன்னு விசாரிச்சுட்டுப் போறதுக்காக நம்ம வீட்டுக்கு வந்தா. நீ நினைக்கிறதைப் போலெல்லாம் ஒண்ணும் இல்லே. உனக்கு வேற ஏதாவது கேக்கணும்னா நாளைக்கு பாங்குக்கு வந்து கேட்டுக் கோ.... வா, ராதா போகலாம்." என்று ரவி ராதாவின் கையைப் பற்றிக் கொண்டு நடக்கத் தொடங்கினான்.

ரவி தன் கையைப் பற்றிக் கொண்டதும் அந்த ஸ்பரிசத்தால் ராதாவின் உடல் சிலிர்த்து விட்டது. இதுவரை அவள் அந்த அநுபவத்தை அடைந்ததில்லை.

"சரி போ. நாளைக்கு வரத்தான் போறேன் பாக்கி ரூபாயை நீ கொடுக்கல்லியே, ஞாபகமாகக் கொண்டு வா. ஏதாவது சாக்குப் போக்குச் சொல்லாதே" என்று கூறிவிட்டுப் பாலு தன் நண்பர் களை நோக்கித் திரும்பிச் சென்றான்.

சிறிது தூரம் நடந்து செல்லும் வரையில் ராதாவைப் பற்றி யிருந்த தனது கையை ரவி விடவில்லை. விடுவித்துக் கொள்ள வேண்டுமென்ற விருப்பம் ராதாவுக்கும் இருக்கவில்லை. ஆனால் அப்படி விடுவித்துக் கொள்ளாமல் இருப்பது முறையல்ல என்றும் அவளுக்குத் தோன்றியது. ஆனால் தானாக விடுவித்துக் கொண் டால் ரவி தவறாக நினைத்துக் கொண்டு வருத்தப் படுவானோ என்ற பயமும் தோன்றியது. என்ன செய்வதென்று தெரியாமல் அவள் இன்பமும் பயமும் கலந்த உணர்ச்சிகளின் மோதலில் திணறிய படியே நடந்தாள்.

"ஓ...ஐம் சாரி ராதா. என்னை மன்னிச்சுடு" என்று கூறி அவளைப் பற்றியிருந்த கையை விட்டான்.

"இட் ஈஸ் ஆல்ரைட். நீங்க ஏதோ ஒரு வேகத்துல உங்களையே மறந்துட்டிங்க. அவ்வளவுதானே? நான் இதைத் தப்பா எடுத் துக்கலே."

"நீயே உன் கையை விடுவிச்சுண்டிருக்க லாமே?"

"போனாப் போறது. அதைப் பத்தி என்ன இப்பப் பெரிசா?"

"ராதா, உனக்கு இது ஒரு அதிர்ச்சியாயிருக்கு இல்லியா?"

"எது?"

"எனக்கு இப்படி ஒரு அண்ணன் இருக்கிறது?"

"நீங்க அவரைப் பத்திச் சொன்னதே இல்லையே? உங்க கூடப் பிறந்த அண்ணனா?"

"ஆமா ராதா. சொல்றதுக்குச் சந்தர்ப்பம் ஏற்படலேங்கறது மாத்திரமல்ல. அவனைப் பத்தி நான் பெருமையாச் சொல்லிக் கிறதுக்கு என்ன இருக்கு? நீயேதான் இப்பப் பார்த்தியே! படிப் பில்லே. அப்பா வீட்டை விட்டு விரட்டிட்டார். மூணு வருஷம் ஆகப் போறது. வேலை வெட்டி ஏதாவது இருக்கோ இல்லையோ ஒண்ணும் தெரியலே. இப்படிப்பட்ட உதவாக்கரை ப்ரெண்ட் ஸோட சேர்ந்துண்டு திரிஞ்சுக்கிட்டிருக்கான். ஒரு சமயத்துலே எனக்கு அவன் பேரிலே பரிதாபமா இருக்கு. இன்னொரு




சமயத்துலெ கோபம் வறது. அவன் திருந்தி மறுபடியும் குடும்பத் தோட வந்து சேர்ந்துண்டு ஒழுங்கா இருப் பானுன்னு நான் கவலைப்பட்டுண்டே இருக்கேன்'' என்றுன் ரவி.

''பாவம். ஏன் அப்படி?'' என்று ராதா பரிவுடன் கேட்டாள்.

ரவி முதலிலிருந்து கதை முழு வதையும் அவளுக்குச் சொன்னுன் — நடந்து கொண்டே கதை முடியும் சமயத்துக்கு அவர்கள் வஸ்முனையை வந்தடைந்திருந்தனர்.

''அப்பேபா, நான் வீட்டுக்குப் போறேன்'' என்றுள் ராதா.

''வீடுவரைக்கும் நான் துணைக்கு வரட்டுமா?''

''வேண்டாம் ரவி. ஏற்கனவே உங்களுக்கு லேட்டாயிடுத்து. நான் தனியாய்ப் போய்க்குவேன்.''

''ராதா, உனக்கு என் மேலே வெறுப்புத் தோணும இருக்கணு மேன்னு இப்ப எனக்குக் கவலையா யிருக்கு.''

''நீங்க இப்படிப் பேசறதுதான் எனக்கு வருத்தமா யிருக்கு. உங்க மேலே எனக்கு எதுக்காக வெறுப்புத் தோணனும்?''

''என் அண்ணன் விஷயமா....''

''அதுக்கு நீங்க எப்படிப் பொறுப் பாக முடியும்?''

''அப்படின்னு சந்தோஷம் ராதா. உன்னைப் பத்தி நான் சந்தேகப் பட்டதுக்காக என்னை மன்னிச்சுடு. நான் வரட்டுமா?''

''குட் நைட்.''

''குட் நைட்.''

கேஸ் கட்டுக்களைப் படித்துக் கொண்டிருந்த குப்புசுவாமி, சுவரில் கடிகாரம் மணி யடிப்பதைக் கேட்டு நிமிர்ந்து பார்த்தார்.

மணி எட்டு.

''சரோஜா'' என்று அழைத்தார்.

''வந்துட்டேன்'' என்று குரல் கொடுத்த படியே அடுத்த அறையி லிருந்து கதவைத் திறந்து கொண்டு அவர் மனைவி சரோஜா உள்ளே நுழைந்தாள்.

''மணி எட்டடிச்சாச்சே. சாப் பிடலாமா?'' என்று குப்புசுவாமி மனைவியைக் கேட்டார்.

''ராதா இன்னும் வரலே. உங் களுக்குப் பரிமாறுதானுச் சாப் பிடுங்கோ.''

''எங்கே போயிருக்கா? ஆபீசி லேந்தா இன்னும் வரல்லே?''

''ஆபீசிலேந்து வழக்கம் போல வந்தாச்சு. வந்ததும் வராததுமா அவசரம் அவசரமாக டிரஸ்ஸை மாத்திண்டு எங்கியோ போனு. யாரோ அவளோட ஃப்ரண்டோட அப்பாவுக்கு உடம்பு சரியில்லையாம்.

பார்த்துட்டு வரேன்னு சொல்லிட்டுப் போனா. எட்டு மணிக்குள் வந்துடறேன்னு சொல்லிட்டுத்தான் போனா. என்னமோ காணோம்.''

''அப்ப வந்துடுவா. வரட்டும். எல்லாரும் ஒண்ணாவே சாப்பிட்டுருவோம். குழந்தைகளெல்லாம் சாப்பிட்டாச்சா?''

குழந்தைகள் என்று குப்புசுவாமி குறிப்பிட்டது சரோஜாவுக்குப் பிறந்த குழந்தைகளை.

''ஸ்ரீதரும் சீனுவும் சினிமாவுக்குப் போயிருக்கா. சாப்பாடு வேண்டாம்னு சொல்லிட்டுப் போயிட்டா. ப்ரண்ட்ஸோட போயிருக்கா. எல்லாரும் சினிமா முடிஞ்சு ஹோட்டல்லே சாப்பிட்டுக்கறனாம். கோபு இன்னும் சாப்பிடல்லே. படிச்சுண்டிருக்கான். லீலாவும் பத்மாவும் சாப்பிட்டுட்டுத் தூங்கியாச்சு.''

வாசலில் செருப்புச் சத்தம் கேட்டது.

அடுத்த நிமிடம் ராதா உள்ளே நுழைந்தாள்.

''என்னம்மா, எங்கே போயிருந்தே? யாருக்கு உடம்பு சரியில்லே?''

''ரவியோட ஃபாதருக்கு அப்பா.''

''என்ன?''

''பராலிடிக் அட்டாக்காம்.''

''அடப் பாவமே. எப்படி இருக்கார் இப்ப?''

''ஒண்ணும் தெரியலே. ஒரு லைட் அட்டாக் ஆகியிருக்காப்பலெ இருக்கு. பேசக்கூட வரல்லேன்னு சொன்னா. ட்ரீட்மெண்ட் ஆனதுக்கப்புறம்தான் பார்க்கணும்.''

''ம்... சரி வா, சாப்பிடலாம்.''

எல்லாரும் சாப்பிடப் புறப்பட்டுச் சென்றனர்.

டைனிங் டேபிளின் முன்னால் குப்புசுவாமியும் சரோஜாவும் ஒரு புறமும், ராதாவும் கோபுவும் இன்னொரு புறமும் உட்கார்ந்து கொண்டார்கள். சமையற்காரர் பரிமாற ஆரம்பித்தார்.

குப்புசுவாமிக்கு எப்போதும் பேசிக் கொண்டே சாப்பிட வேண்டும். அதிலும் இரவுச் சாப்பாட்டின்போது அது மிக அவசியம். காலைச் சாப்பாடென்றால் மற்றவர்கள் சீக்கிரம் சாப்பிட்டுவிட்டுப் போய்விடுவார்கள் அவரும் சரோஜாவும் மாத்திரம் பத்து மணிக்குச் சாப்பிடுவார்கள். அதன் பிறகு அவர் கோர்ட்டுக்குப் புறப்படுவார். அதனால் அவசரம் அவசரமாகச் சாப்பாடு நடைபெற்றுவிடும். பேச்சில் சுவாரசியம் இருக்காது. இரவுச் சாப்பாடென்றால் அப்படியில்லை. எல்லோரும் ஒன்றாக உட்கார்ந்து சாப்பிடுவார்கள். அவசரம் ஒன்றும் இல்லை. ஆகவே சாவகாசமாக அரட்டை அடித்துக் கொண்டே சாப்பிடுவார்கள்.

குப்புசுவாமி நல்ல ரசிகர். வாழ்க்கை அனுபவிப்பதற்குத்தான் இருக்கிறது என்பது அவர் அபிப்பிராயம். நல்ல சாப்பாடு, நல்ல துணிமணிகள், சினிமா, நாடகம், சங்கீதக் கச்சேரிகள் இவைகளிலெல்லாம் ஆர்வத்தோடு ஈடுபட்டு மனநிறைவு பெறுவார். சரோஜா விஷயத்திலும் அவர் அதிருஷ்டசாலி. ஐந்து குழந்தைகளின் தாய் என்று அவளைப் பார்ப்பவர்கள் யாரும் நம்ப மாட்டார்கள். வயது முப்பத்தெட்டு. ஆனால் முப்பது வயதுப் பெண்ணின் உடற்கட்டு. நல்ல அழகி. இவைகளோடு மட்டுமல்லாமல், இனிமையான சுபாவம். குப்புசுவாமியின்மீது தன் உயிரையே வைத்திருந்தாள். இருவருக்கும் வயது வித்தியாசம் அதிகமில்லை. குப்புசுவாமி இன்னும் நாற்பத்தைந்தைத் தாண்டவில்லை.

சரோஜாவும் ராதாவும் பழகும் விதத்தைப் பார்த்தவர்கள் ராதா மூத்தாளின் பெண் என்றே நம்ப மாட்டார்கள். தன் குழந்தைகள் வேறு, ராதாவேறு என்கிற எண்ணமே சரோஜாவுக்கு எப்போதும் மனத்தில் முளைவிட்டதில்லை.

நல்ல பிஞ்சுக் கத்தரிக்காயை எண்ணெயில் விட்டு வதக்கிய பொரியல், அப்பளம், எலுமிச்சம்பழ ரசம் சமையல். நார்த்தங்காய் ஊறுகாய் வழக்கம் போல் இருந்தது.

''ரவி வீடு எங்கே இருக்கு?'' என்று கேட்டார் குப்புசுவாமி.

''கபாலி கோவிலுக்குப் பக்கத்திலெ அப்பா. பிச்சுப் பிள்ளை தெருவிலெ.''

''இவ்வளவு நேரமும் அவாத்திலேதான் இருந்தியா, வேற எங்கியாவது போயிருந்தியா?''

குப்புசுவாமி இந்தக் கேள்வியைச் சாதாரணமாகக் கேட்டுவிட்டு, கத்தரிக்காய் பொரியலையும், அப்பளத்தையும் சேர்த்து, சாதத்தோடு பிசைந்து உருட்டி அதன் சுவையை அனுபவித்துச் சாப்பிடலானார். ஆனால் ராதாவுக்கு 'திக்'கென்றது. ''ஆமாம்'' என்று சொன்னால் அது உண்மையாகாது. ரவியும் தானும் கடற் கரைக்குப் போய் உட்கார்ந்திருந்தோம் என்று சொன்னால் அப்பா என்ன நினைப்பார்? சாதாரணமாக அதில் தவறொன்றுமில்லை. அப்பா எதுவும் நினைத்துக் கொள்ளவும் மாட்டார். ஆனால் இன்று,

---

## ரசிப்பதில் ஒரு சாதனை!

எழுபது வயதை எட்டிப் பிடித்து விட்டிருக்கும் ஹார்ஃபோர்ட் நார்மன் ஒல்டன் என்ற ஆங்கிலேயர் திரைப்படங்களைப் பார்ப்பதில் ஓர் உலக சாதனையை ஏற்படுத்தியிருக்கிறார்.

சென்ற மார்ச் மாதத்தில் அவர் பம்பாய் நகருக்கு வந்திருந்தபோது பார்த்த 'சம்மர்-42' என்ற திரைப்படத்தைச் சேர்த்து அவர் கணக்கு 10065த் தொட்டிருக்கிறது.

— இல்லஸ்ட்ரேட்டட் வீக்லி

மேனு



அவன் தகப்பனார் உடல்நிலை பாதிக்கப்பட்டிருந்தபோது, அவரைப் பார்ப்பதற்காக வென்று சென்றதானும், அவர் உடல் நிலையைப் பற்றிய கவலையில் ஆழ்ந்திருக்க வேண்டிய ரவியும் கடற்கரைக்குப் போய் உட்கார்ந்திருந்தோம் என்றால் ரவியைப் பற்றி அவர் தவறாக நினைத்து விட்டால்?

''என்னை வீட்டுக்குக் கொண்டு வந்து விடலாம்னு நினைச்சுண்டு ரவி என்னோட கொஞ்ச தூரம் வந்தார். அவங்க அப்பாவோட உடம்புக்கு வந்தது, அவருக்கு 'ஷாக்' அடிச்சாப்பலே ஆயிட்டுது. கொஞ்சம் மனசுக்கு நிம்மதியா எல்லாத்தையும் மறந்துட்டு இருக்கட்டும்னு நான்தான் அவரைக் 'கம்பெல்' பண்ணிக் கடற் கரைக்கு அழைச்சுண்டு போனேன். ஆனா, அப்படியும் என் எண்ணம் பலிக்கலெ. அங்கேயும் அவர் கவலைப்பட்டுண்டேதான் இருந்தார்'' என்று கூறி முடித்தாள் ராதா.

குப்புசுவாமி மகளை ஒரு விநாடி உற்றுப் பார்த்தார். பொருள் விளங்காத அவருடைய அந்தப் பார்வைக்கு ஈடு கொடுக்க முடியாமல் ராதா தன் தலையைக் கவிழ்த்துக்கொண்டாள்.

குப்புசுவாமி சரோஜாவைத் திரும்பிப் பார்த்து லேசாக முறுவலித்தார். அதன் அர்த்தம் புரியாவிட்டாலும் ராத்திரி படுக்கையில் இருக்கும்போது கேட்டுக் கொள்ளலாம் என்று நினைத்தவளாய் அவளும் பதிலுக்குப் புன்னகை புரிந்து வைத்தாள்.

சமையற்காரன் சாதம் பரிமாறினான், ரசத்திற்காக.

''என்ன சாமா? நாளைக்கு என்ன சமையல்?'' என்று குப்புசுவாமி வேண்டுமென்றே ராதா சமாளித்துக் கொள்வதற்கு அவகாசம் கொடுக்கும் நோக்கத்துடன் பேச்சை வேறு திசையில் திருப்பினார்.

''நீங்க எப்படிச் சொல்றேளோ அப்படிச் செய்யறேன்.''

''என்ன சரோஜா, நீ என்ன சொல்றே?'' என்று குப்புசுவாமி மனைவியைப் பார்த்தார்.

''முருங்கைக்காய் இருக்கு. அதையும் வெங்காயத்தையும் போட்டுச் சாம்பார் வெச்சுடு. உருளைக் கிழங்கைப் பொடிமாஸ் பண்ணிடு. தயிர்ப் பச்சடி. தேங்காய் போட்டு. போறுது?'' என்று பேச்சின் முன் பகுதியைச் சாமாவைப் பார்த்தும் கடைசி வார்த்தையை மட்டும் கணவனைப் பார்த்தும் பேசினாள்.

''பேஷாப் போறும். நீ சொல்லியாச்சுன்னு அப்புறம் அப்பீல் உண்டா?'' என்று கூறிக் குப்புசுவாமி சிரித்தார். ராதாவும் சரோஜாவும் சிரிப்பில் கலந்து கொண்டனர்.

''அப்பா, எனக்குப் பாயசம் வேணும்பா'' என்றான் கோபு. அவனுக்கு எட்டு வயது ஆகிறது. மூன்றாவது வகுப்பில் படிக்கிறான். படிப்பில் நல்ல சூடிகை. எல்லாப் பாடங்களிலும் அவன் ஐந்தாவது ராங்குக்குள் வாங்கிக் கொண்டிருந்தான்.

''பலே, நீதான்டா சாப்பாட்டுராமனுக்கு பிறந்த விருந்து ராமன். என்ன பாயசம் வேணும்? பால் பாயசமா, கடலைப் பருப்பு பாயசமா, பாதாம் கீரா, சேமியாவா, காரெட் பாயசமா....?''

''அதெல்லாம் வேண்டாம்பா. பயத்தம் பருப்பு பாயசம்.''

''ரைட். என்ன சாமா கேட்டுண்டியா? மறந்துடப் போறே'' என்று குப்புசுவாமி பெருமையுடன் சாமாவிடம் மகனின் விருப்பத்தைப் பூர்த்தி செய்யுமாறு உத்தரவிட்டார்.

''ஏம்மா, ராதா, நீ ஸி. ஏ. ஐ. ஐ. பி. முதல் பார்ட் பாஸ் பண்ணிட்டியில்லே?''

''ஆமாம்ப்பா.''

''ரவி?''

''அவரும் பாஸ் பண்ணிட்டாரப்பா.''

''செகண்ட் பார்ட்டுக்கு ரெண்டு பேரும் படிச்சுண்டிருக்கேளா?''

''ஊம்.''

''அவுங்கப்பா போஸ்டல் டிபார்ட்மெண்ட்லயா இருக்கார்னு சொன்னே?''

''இல்லேப்பா. பி.எஸ். ஹைஸ்கூல்லே டீச்சர்.''

''ஓஹோ?''

''ஏம்ப்பா?''

''ஒண்ணுமில்லே. சும்மாத்தான் கேட்டேன்'' என்றார் குப்புசுவாமி.

சிறிது நேரம் ஒருவரும் ஒன்றும் பேசவில்லை.

பிறகு குப்புசுவாமி கேட்டார்: ''ரவிக்கு என்ன வயசு தெரியுமா?''

''தெரியாது'' என்றாள் ராதா.

''பார்த்தால் இருபத்திரண்டோ, இருபத்தி மூணோதான் இருக்கும் போலிருக்கு'' என்றாள் சரோஜா.

''உனக்கென்னம்மா வயசு இப்போ?'' என்று குப்புசுவாமி ராதாவைப் பார்த்துக் கேட்டார்.

''இருபத்தொண்ணு.''



1813ல் ஒருவர் பிரிட்டிஷ் ராணுவத்தில் சேர்ந்தார். அவர் அதி மேதாவியாகவும் மிகுந்த கோபக் காரராகவும், மண்டை கர்வம் பிடித்தவராகவும் கருதப்பட்டார். 52 ஆண்டுகள் இவர் தளபதியாகப் பணியாற்றினார். இவர் லண்டனில் இறந்த பிறகுதான் ஒரு பெண்மணி எனத் தெரிந்தது. காதலில் ஏற்பட்ட தோல்வி இவரை இப்படி வெறுப்புக்கொள்ளச் செய்து விட்டதாம். இவர் பெயர் ஜேம்ஸ் பெரி.

—குமிலி ராஜேஸ்வரி

சரோஜா சிரித்தாள்.

''ஏன் சிரிக்கிறே சரோஜா?''

''இல்லே, நீங்க கேட்டுண்டு போறதைப் பார்த்தா அடுத்தாப்பலே ரவியோட கோத்ரம் என்ன, ஜாதகம் வெச்சிருக்கியான்னு கேட்பேளோன்னு தோணித்து. சிரிப்பு வந்தது'' என்றாள்.

ராதாவின் முகத்தில் லஜ்ஜை படர்வதைக் காண முடிந்தது.

குப்புசுவாமி தயிர் சாதத்தைச் சுவைத்துச் சாப்பிட்டுக் கொண்டிருந்தார். சரோஜாவின் பேச்சுக்குப் பதில் சொல்லவில்லை. சாப்பிட்டு முடித்து எழுந்து கொண்டே, ''ராதா, கையலம்பிண்டு என் ரூமுக்கு வாம்மா. உன்னோட நான் கொஞ்சம் பேசவேண்டியிருக்கு'' என்றார்.

''நானும் வரலாமா? இல்லே, ராதாவோட மாத்திரம் சொல்ல வேண்டிய ரகசியமா?'' என்று சரோஜா விளையாட்டாகக் கேட்டாள்.

''நீயும் வா'' என்று சொல்லிவிட்டுக் குப்புசுவாமி வாஷ் பேசினை நோக்கிச் சென்றார்.

குப்புசுவாமி வெற்றிலை பாக்குப் போட்டு முடிக்கும்வரையில் ராதா அவருக்கு எதிராக உட்கார்ந்து கொண்டு மேஜை மீதிருந்த ''இல்லஸ்டிரேட்டட் வீக்லி''யைப் புரட்டிக் கொண்டிருந்த போதிலும் அவள் இதயம் அவர் என்ன சொல்லப் போகிறாரோ, என்ன கேட்கப் போகிறாரோ என்ற எதிர்பார்ப்பில் படபடத்துக் கொண்டிருந்தது. சரோஜாவும் அவளுக்கருகில் ஒரு நாற்காலியில் அமர்ந்து வெற்றிலை பாக்குப் போட்டுக் கொண்டிருந்தாள்.

---

விண்வெளி உடை வீரர்களுக்கு மட்டுமல்ல. பெத் போன்ற நோயுள்ள குழந்தைகளுக்கும் தான். நாலு வயதான இவனுக்கு ஓர் அபூர்வ வியாதி. நோய் எதிர்ப்பு சக்தி இவன் உடலில் உருவாவதே இல்லை. எந்தச் சிறு நோயும் மரணத்தில் முடியலாம். எனவே சதா ஆஸ்பத்திரியில் கிருமிகளற்ற அறையில்தான் வாழ வேண்டும். வெளி உலகையும் இவனைப் போன்றவர்கள் பார்க்க வசதியாக அமெரிக்க விண்வெளி கேந்திர நிபுணர்கள் கிருமிகளற்ற இந்த உடையைத் தயாரித்தனர். பக்கத்தில் தெரியும் வண்டியில் நோயாளி பயணம் செய்யலாம். கிருமிகளற்ற காற்றை வண்டியிலுள்ள ஓர் உபகரணம் உற்பத்தி செய்து விண்வெளி உடலுக்குள் அனுப்புகிறது.



குப்புசுவாமி ஜிண்டான் பாட்டிலைத் திறந்து இரண்டு ஜிண்டான் குளிகைகளை வாயில் போட்டுக் கொண்டு முகத்தில் திருப்தி நிலவ அவ்விருவரையும் பார்த்து ஒரு புன்னகை புரிந்தார்.

ராதா பதிலுக்கு முறுவலித்த போதிலும் அவள் முகத்தில் கலவரம் நிறைந்திருந்ததைக் காண முடிந்தது.

''கதையை ஆரம்பிக்கலாமே'' என்றாள் சரோஜா சிரித்துக் கொண்டே.

''ராதா, நான் கேட்கறதுக்கெல்லாம் பயப்படாம, கூச்சப்படாம நீ பதில் சொல்லணும் என்ன?''

''சரி.''

''ரவியோட நீ கொஞ்சம் நெருங்கிப் பழகிண்டிருக்கே இல்லியா?''

ராதா தயங்கினாள்.

''சொல்லு. உன் மனசுக்கு உண்மைன்னு படறதை ஒளிக்காம சொல்லு. உன்னோட நன்மையை உத்தேசித்துத்தான் இதையெல்லாம் நான் கேட்கிறேன்.''

''நெருங்கிப் பழகிறதுன்னு நீங்க என்ன அர்த்தத்துலே கேட்கிறேன்னு புரியல்லே'' என்றாள் ராதா.

''பாங்குல நீ எவ்வளவோ ஆண்களோட பேசிப் பழகிறதில்லையா? உன் கூட வேலை செய்யறவங்களோட? ரவியோட நீ பழகறது அந்த மாதிரி இல்லையா, கொஞ்சம் அதை விட நெருங்கிய பழக்கமில்லையான்னுதான் கேட்கிறேன்.''

''ஆமா.''

''ஏன்?''

''ஏன்னு எனக்கே தெரியாது. என்னமோ எனக்கு அவரைப் பிடிச்சிருக்கு. அவருடைய சுபாவம் பிடிச்சிருக்கு.''

''நான் வெளிப்படையாவே கேக்கறேன். நீ அவனை வெறும் நண்பன்னு நினைச்சுப் பழகிறயா அல்லது அவனை 'லவ்' பண்றியா?''

ராதா கூச்சத்தால் முகத்தைக் கவிழ்த்துக் கொண்டாள். தகப்பனுடன் முதன் முதலாக இது போன்ற விஷயங்களில் பேச்சு வந்திருக்கிறது.

''அவனைக் கல்யாணம் பண்ணிக்கணும்கற எண்ணம் உனக்கு உண்டா?''

''ஊம்.''

''அவனுக்கும் அந்த எண்ணம் இருக்கா? இதுபத்தி உங்களுக்குள்ள பேசிக்கிட்டிருக்கிங்களா?''

கடற்கரையில் தாங்கள் பேசிக்கொண்டது ராதாவின் நினைவுக்கு வந்தது.

''அவருக்கும் அந்த விருப்பம் உண்டு.''

''அப்ப சரி. இப்போ....'' குப்புசுவாமி மேலே சொல்ல வந்த வார்த்தைகளைச் சொல்வதற்கு முன் வாசலில் அழைப்பு மணியின் சப்தமும் ''அக்கா'' என்ற குரலும் கேட்டன.

''நாகு வந்திருக்கான் போலிருக்கு'' என்று சரோஜா எழுந்து சென்றாள்.

குப்புசுவாமியும் ராதாவும் நாகுவின் வரவை எதிர்பார்த்தபடி மௌனமாக அமர்ந்திருந்தனர்.

(தொடரும்)

# அரிப்பும் எரிச்சலும் தரும் வியர்க்குருத் தொல்லையிலிருந்து விடுதலை பெறுவீர்!




2
பேக்குகளில்—
'ப்ளூ' மற்றும்
'ஸாண்டல்வுட்'




**வாங்குவீர் நைஸில்—**
**விரட்டுவீர் வியர்க்குருவை.**
**விலை 6 ரூ. 63**
**பைசாதான்.***

* அதிகபட்ச சில்லறை
விற்பனை விலை
உள்ளூர் வரிகள் தனி.



மருந்துக் கலவை
யுள்ள நைஸில்:
1. அதிக வியர்வை
யைத் தவிர்க்கிறது.
2. வியர்வையை
உறிஞ்சுகிறது.
3. துர்நாற்றம் ஏற்
படுத்தும் கிருமி
களை அழிக்கிறது.
4. சருமத்திற்கு இத
மளிக்கிறது.

GN-80-364 TM.

"ஸார், எம்.டி. கூப்பிடுறார்."

குனிந்த தலையை நிமிர்த்தாமல் கண்களை மட்டும் உயர்த்தி ஒரு ரஜினிகாந்த் பார்வையை எதிரே நின்று கொண்டிருந்த பியூன் பன்னீரின் மேல் வீசிவிட்டு இடத்தை விட்டு எழுந்தான் கோபி. 'டை'யைச் சரிசெய்து கொண்டு எம். டி.யின் அறையில் நுழைந்த போது... அங்கு ஸ்டெனோ புவனாவும் இருந்தாள். புவனாவைத் தழுவி நின்ற 'இண்டிமேட்'டின் மணம் பர்மிஷன் இன்றி அவன் உடம்பிலும் பரவ, அந்தப் பரவல் அவன் மனத்தில் ஒரு மெல்லிய இறக்கத்தை உண்டு பண்ணியது.

"மிஸ்டர் கோபி!" என்றார் எம்.டி.

"ஸார்...."

"அக்கௌண்டெண்ட் பாண்டுரங்கனுக்குப் பதினைந்து நாள் லீவு கொடுத்து அனுப்பிட்டீங்களாமே!"

"எஸ் ஸார்."

"இந்த பிராஞ்சு ஆபீஸிலே இப்போ ஆடிட் நடந்துக்கிட்டு இருக்கிறது உங்களுக்குத் தெரியும்னு நினைக்கிறேன்."

"ஒரு மானேஜருக்குத் தெரியாம ஒரு ஆபீஸ்ல ஆடிட் நடப்பது...."

"கம் டு தி பாண்ட்... நேரே பதில் சொல்லுங்க."

"தெரியும் ஸார்."

"ஆடிட் நடக்கும்போது அக்கௌண்ட்ஸ் செக்ஷன் பார்க்கும் ஒருத்தருக்கு, அதுவும் சீப் அக்கவுண்டண்டுக்கு லீவு சாங்ஷன் செய்திருக்கீங்க...."

"எஸ் ஸார்."

"ஒரு மானேஜர் செய்யக் கூடிய காரியமல்ல இது."



ஜெயவண்ணன்

"லீவு சாங்ஷன் செய்யறது எல்லா பிராஞ்ச் மானேஜர்களும் செய்யற காரியம் தானே சார்."

"மே...பி... எல்லாத்துக்கும் ஒரு நேரம் காலம் வேணும்..."

"ஸார், அவர் ஒய்ஃபுக்கு இது டெலிவரி டைம். கூட இருந்து கவனிக்க வேற யாரும் இல்லே. நிலைமையை விளக்கிச் சொல்லி லீவு கேட்டார். கொடுத்தேன். அவர் இல்லாமலேயே இந்த ஆடிட்டை ஃபேஸ் பண்ண என்னால முடியும். பண்ணிக்கிட்டுத்தான் இருக்கேன்...."

"ஸோ, நீங்க செஞ்சது கரெக்ட்டுன்னு சொல்ல வர்றீங்க, அப்படித்தானே?"

"இதிலே எந்தத் தப்பும் இருக்கிறதா நான் நினைக்கலே, ஸார்."

"உங்க விளக்கத்தை நான் ஒத்துக்க முடியாது."

"நான் உங்களைக் கட்டாயப்படுத்த முடியாதே ஸார்."

புவனா இருவரையும் மாறி மாறிப் பார்த்தாள்.

# கோணங்கள் மாறுகின்றன..

பிரேம்மாயா..

கோபத்தோடு இடத்தை விட்டு எழுந்த எம். டி. அறையில் குறுக்கும் நெடுக்கும் நடந்தார். 'பைப்'பை வாயில் வைத்து இரண்டு முறை 'குப்குப்' விட்டார். பிறகு நின்று கோபிநாத்தைப் பார்த்தார்.

''ரைட், அடுத்த விஷயத்துக்கு வர்றேன்.''

வரட்டுமே!

வந்தார்.

''டைப்பிஸ்ட் ஷர்மலிக்கு ஒரு இன்க்ரி மெண்டை. கட் பண்ணச் சொல்லி ஆர்டர் போட்டிருக்கீங்களே....''

''எஸ் ஸார்.''

''காரணம்?''

''அதையும் அதே ஆர்டரில் தெளிவாக் குறிப் பிட்டிருக்கேன், ஸார்.''

''இப்போ நீங்க சொல்லுங்க.''

''டைப் செய்யறதுக்காக ஷர்மலிகிட்டே ஒரு முக்கியமான ஃபைலை முதல் நாள் கொடுத்தேன். அந்த ஃபைல் அவளோட கஸ்டடியிலேதான் இருந்திருக்கு. மறு நாள் அந்த ஃபைல் காணுமல் போயி ருக்கு.''

''அதற்கு அந்தப் பொண்ணு தான் பொறுப்பா?''

''சர்டன்லி.... ஷர்மலியோட பொறுப்பின்மையும் கவனக் குறை வுமே இதுக்கு முழுக் காரணம். அத னுல்தான் ஒரு இன்க்ரிமெண்டைக் கட் பண்ணினேன். இதுதான் அவ ளுக்குச் சரியான பணிஷ்மெண்ட்...''

''உங்க விளக்கம் எனக்குத் திருப்தி யளிக்கலே.''

''ஸாரி ஸார். இதற்கு மேலே இந்த விஷயத்தை விளக்க எனக்குத் தெரி யலே.''

''மிஸ்டர் கோபி!''

எம். டி.யின் குரலில் சூடேறியது.

''நீங்க தன்னிச்சையா மனம் போன போக்

கிலே செயல்படறதா நான் நினைக்கிறேன்.''

''ஒரு பிராஞ்ச் மானேஜர் எப்படி நடந்துக்க வேணுமோ அப்படித்தான் நடந்துக்கிட்டிருக்கிறதா நான் நினைக்கிறேன்.''

அந்தச் சூடு கோபியின் குரலிலும் எதிரொலித்தது.

புவனா சங்கடத்துடன் நெளிந்தாள்.

''ஒரு மானேஜர் ஸ்டிரிக்டா இருக்க வேண்டியதுதான். ஆனா, அதே நேரம் கொஞ்சம் இரக்கத் தன்மையும் மனசிலே இருக்கணும்....''

''இரக்க குணம் இருந்ததால்தான் பாண்டுவுக்கு லீவு கொடுத்தேன். ஸ்டிரிக்டா இருக்கிறதாலேதான் ஷர்மிளிக்குத் தண்டனை கொடுத்தேன்.''

''நீங்க ரெண்டையும் இடம் மாத்திப் பயன்படுத்தியிருக்கீங்க.''

''ஸாரி ஸார். என் மனசுக்குச் சரின்னு பட்டதை நான் செஞ்சேன். இதிலே எனக்கு எந்த வித விருப்போ வெறுப்போ கிடையாது.''

''அப்போ, நான் யாருக்காவது ஃபேவர் செய்யறேன்னு நினைக்கிறேளா?''

''இருக்கலாம்.''

''மிஸ்டர் கோபி!''

''ஸார்.''

''ஒரு எம். டி. கிட்டே ஒரு மானேஜர் எப்படிப் பேசணும்னு முதல்லே தெரிஞ்சுக்குங்கோ.''

''அதே நேரத்திலே ஒரு மானேஜருக்கு என்னென்ன 'பவர்' இருக்குன்னு ஒரு எம்.டி.க்கு தெரியலேன்னு வருத்தப்படறேன், ஸார்.''

''வாட் டூ யூ மீன்?''

''ஐ மீன், வாட் ஐ ஸே....''

''நீங்க அதிகமாப் பேசறீங்க.''

''அதுக்கு நீங்கதான் காரணம்.''

''எனக்குக் கோபம் வந்தால்?...''

''என்னை டிஸ்மிஸ் செய்வீங்க. அந்தச் சிரமம் உங்களுக்கு வேண்டாம். நானே ராஜிநாமா செய்துடறேன்... குட்பை...''

கடற்கரை.

அவசரப்படும் இளம் உள்ளங்களின் எரிச்சலைச் சம்பாதிக்க விரும்பாத ஆதவன் ஓடி ஒளிந்து சிறிது நேரமாகியிருந்தது.

---

கொலம்பியாவைச் சேர்ந்த திருமதி ஃபேலியா கிஜூனா தன்னுடைய நூறாவது (100) வயதில் 32 வயதுடையவரை மணந்து, 101 ஆவது வயதில் நல்ல பலமான ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தார். மருத்துவ சரித்திரத்திலேயே புதுமையான நிகழ்ச்சி இது. 1945ஆம் ஆண்டு நடந்தது. குன்ஜா முனிசிபாலிடி இதைப் பதிவு செய்திருக்கிறது. —குமாரி ராஜேஸ்வரி



கோபி. அவனருகே புவனா.

அந்த 'ஜீரோ வாட்' ஒளியிலும் பளபளத்த அவளது இடையில் ஒரு கரத்தைப் பதித்து ஒரு முறை சுற்ற விட்டபின், விரல்களை மெல்ல மடக்கி, சேலையின் இடையில் செருகிச் சடேரென்று அவளைத் தன்னருகே இழுக்க....

'வீல்' என்று கூவி அவள் அவன் மேல் சரிய....

பின்,

''சே, என்ன விளையாட்டு இது? யாராவது பார்த்தால்....?'' என்று அவள் வெட்கத்துடன் கேட்க,

''யாராவது என்ன? எவ்வளவு பேர் நம்மையே பார்த்துக் கொண்டிருக்கிறார்கள் பார்'' என்று அவன் சொன்னான்.

அவள் திரும்பி, சுற்று முற்றும் பார்த்தாள்.

பின்புறம், முன்புறம், அந்தப் பக்கம், இந்தப் பக்கம் என்று மணலில் உட்கார்ந்திருந்தவர்கள் எல்லோரும் இவர்களையே கண்களாய் மேய, நாணம் பெருஞ் சுமையாய் அழுத்த அப்படியே சில விநாடி நேரம் தலையைக் குனிந்து கொண்டாள் புவனா.

பின், நிமிர்ந்தபோது கேட்டாள்: ''வேலையை ராஜிநாமாச் செய்துட்டீங்களே, கோபம் வந்தால் இப்படியா செய்வது?''

''என்ன செய்யறது? அந்த எம். டி. மட்டும் அப்படிப் பேசலாமா?''

''என்ன இருந்தாலும் அவர் எம். டி. இல்லையா?''

''அதனாலே? ஒரு பொண்ணு எதிரே இருக்கும்போது என்னை 'இன்ஸல்ட்' செய்யறது போலப் பேசியது எனக்குப் பிடிக்கலே.....''

''அதுக்காக வேலை வேணும்னு சொல்லிடறதா?''

''வேற என்னை என்ன பண்ணச் சொல்றே?''

''மாசம் ஆயிரம் ரூபாய் சம்பளம் இனிமே யார் தருவாங்க?''

''இந்த வேலை போனால் இன்னொன்னு...''

''இப்படி ஒரு நல்ல வேலை இனிமே உங்களுக்குக் கிடைக்குமா?''

''ஏன் கிடைக்காது?''

''எப்படிக் கிடைக்கும்?''

''நான் நினைத்தால் இதே வேலையைத் திரும்ப வாங்கிடுவேன்.''

''எப்படி?''

அவன் 'கலகல'வெனச் சிரித்தான். பின், அவளது ஒரு கரத்தை இழுத்து மடியில் வைத்துக் கொண்டு, அவள் விரல்களை ஒவ்வொன்றாய்ச் சொடுக்கிக் கொண்டே சொன்னான்: ''எம்.டி. ரொம்ப நல்லவர். அவர் கோபம் வீட்டுக்குப்போனதும் மறைஞ்சிடும். நான் என்ன பேசினாலும் அவர் என் மேலே கோபப்பட மாட்டார். அப்படியே கோபப்பட்டாலும் அதை மனசிலே வச்சுக்க மாட்டார்....''

''எப்படி இவ்வளவு உறுதியாச் சொல்றீங்க?''

அவள் புரியாமல் கேட்டாள்.

அவன் நிதானமாகப் பதில் சொன்னான்: ''என் அப்பாவோட குணம் எனக்குத் தெரியாதா?''

# இப்போது ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் மிகவும் கவர்ச்சியுள்ளதாயும், எப்போதையும் விட வாங்கும் திறனுக்குட்பட்டும் இருக்கிறது!

**இந்தியாவிலேயே முதன் முதலாக இறுதி (கூடுதலான) போனஸ்!**

தொழில் நுட்பப்படி முடிவைச் சார்ந்த போனஸ் என்று அழைக்கப்படும் 'இறுதி (கூடுதலான) போனஸ் அறிமுகப் படுத்தப் பட்டதிலிருந்து எல்ஐஸி இப்போது உங்கள் முதலீட்டிற்கு இன்னும் கூடுதலான வருமானத்தை ஈன்றளிக்கிறது. சமீபத்தில் அதிகரிக்கப்பட்ட (24% அதிகரிப்பு) தொடர்ந்து வழங்கப்பட்டு வரும் ரிவர்ஷனரி, இடைக்கால போனஸ்களைத் தவிர கூடுதலாக அளிக்கப்படும் இந்தப்பயன் லாபப் பங்குடன் கூடிய பாலிசிகளுக்குக் கிடைக்கும். 1.1.1980ல் இருந்து 31.12.1981 வரை முதிர்வினாலோ அல்லது இறப்பினாலோ கோரிக்கைகளாக மாறும் பாலிசிகளுக்கு, பாலிசியின் திட்டம், காலம் இவற்றின் மீதான சில நிபந்தனைகளுடன், இப் பயன் கிடைக்கும்.

**மிகப்பெரும்பாலான எல்ஐஸி பிரீமியங்களில் குறைப்பு!**

ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் வாங்குவது இப்போது உங்களுடைய வருவாய்க்கு மேலும் இயைந்தவாறு அமைந்திருக்கிறது. 1.4.1980லிருந்து எண்டோமெண்ட், முழு ஆயுள் போன்ற பிரபலமான திட்டங்களில் பெரும்பாலானவற்றின் பிரீமிய வீதங்கள் குறைக்கப் பட்டுள்ளன. ஆயினும் "மணி-பாக்" திட்டத்தின் பிரீமிய வீதங்கள் சிறிதளவு கூடுதலாக உயர்த்தப் பட்டுள்ளன.





இக்குறைப்பின் பயன் லாபப் பங்குடன் கூடியதும், லாபப் பங்கற்றதுமான இருவகைப் பாலிசிகளுக்கும் கிடைக்கும்.

மேலும் விவரங்கள் அறிய உங்கள் அருகாமையிலுள்ள எல்ஐஸி கிளை பகுதி அலுவலகத்தை அணுகுங்கள். இத்தகைய ஊக்குவிக்கும் முன்னேறிச் செல்லும் வளர்ச்சிகளைப் பயன்படுத்திக் கொள்ளுங்கள்.... இன்றே இன்ஷ்யூர் செய்யுங்கள்.

daCunha LIC·86'



**லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பரேஷன் ஆப் இந்தியா**

# ஒற்றன் 4X-1 சித்திரக்கதை: புஜ்ஜாய் ·18























● கராத்தே வீரர் ஆர். வி. டி. மணி இப்பொழுது படங்களில் நடிக்கிறார். அவர் நடித்து வெளி வரப் போவது தேவர் பிலிம்ஸாரின் ''அன்புக்கு நான் அடிமை''. பெங்களூர் பட விழாவில் காட்டப்பட்ட ஒரு ஜப்பானியப் படத்தைத் தமிழில் பல மாற்றங்களுடன் தேவர் பிலிம்ஸ் எடுக்க இருக்கிறது. அதில் மிக முக்கிய பாத்திரமொன்றில் நடிக்கிறார் மணி. இப்படத்தைப் பார்ப்பதற்காகவே அடுத்த மாதம் ஜப்பான் செல்கிறார் மணி!



✱ ஏ. வி. ரமணன்

துப்பாக்கியை வெளியே எடுக்க...

இப்ப என்ன சொல்றே...

விஜயப் பொழுதில் ரமேஷின் துப்பாக்கி இயங்கியது.

டுமீல்!

குண்டர் தலைவன் கரத்திலிருந்த துப்பாக்கி எகிறி விழுந்தது...

ஆ! ஐயோ.

பைத்தியக்காரா! என்கிட்டமா வாலாட்டறே? உனக்குச் சுலபமான சாவு கூடாது. அங்குலம் அங்குலமா உன்னைச் சாக அடிக்கணும்.

அண்ணே! இந்தப் பசங் களோட கை, காலைக் கட்டிப் போடுங்க.

அவ்வாறே கட்டிப் போட்டான்.

உன்னுடைய டீம் ஒருவன் மாடிக்கு வந்தான். அந்த அசடு இப்போ என்னை நீ அடைச்சு வைத்திருந்த அறையில் இருக்கான்.

இன்னும் கொஞ்ச நேரத்தில் போலீஸ் வரும் உங்களை அழைத்துப் போக. டாட்டா! போயிட்டு வரேன்!

வெளியே வந்த ரமேஷ் XX2 க்கு போன் செய்தான்.

4X1 பேசறேன் போலீஸ் படை ஒன்று இங்கே உடனே அனுப் புங்க.

XX2 ரமேஷிடம் பேசி முடித்த பிறகு இலாகாவில் பெரிய அதிகாரியிடம் பேசினார்.

ஆமாம், ஐந்து தேசத் துரோகிகள் பிடிபட்டிருக்காங்க.

● பாடகர் ஏ. வி. ரமணன் ''காதல் காதல் காதல்'' என்ற படத்தின் மூலம் நடிகராகிறார். இப்படத்தை இயக்கி வரும் டைரக்டர் எம். ஏ. காஜா, ரமணனைத் தொடர்ச்சியாக ஏழு படங்களுக்கு ஒப்பந்தம் செய்திருக்கிறாராம்!



சுஹாசினி

● தென்னிந்தியாவின் முதல் பெண் ஒளிப்பதிவாளர் என்று பெயர் பெற்ற கமலஹாசனின் அண்ணன் மகள் சுஹாசினி இப்பொழுது நடிப்பதால் ''ஒளிப்பதிவுத் துறை ஆர்வம் அவ்வளவு தானா?'' என்று கேட்டதற்கு, ''இல்லே சார், நான் ஒளிப்பதிவாளராகத் தான் இருக்க மிகவும் விரும்புகிறேன்'' என்றார். ஆனால் அவரை யார் விட்டார்கள்?

-அசோக்குமார்

போலீஸ் வந்து கட்டிப்போடப் பட்டிருந்த தேசத் துரோகிகளைக் கைது செய்து கொண்டு போயினர். ரேடியோ கருவிகளும் வேறு சிலவும் சாட்சியங் களாயின.

பேராசிரியர் சர்மா தமது வங்கியிடம் ஒரு உறை கொடுத்திருந்தார். தாம் இறந்த பின் தம் மகளிடம் சேர்ப்பிக்க வேண்டும் என்று கோரியிருந்தார். மாலதி வீடு திரும்பியதும் அது அவள் கரத்துக்கு வந்து சேர்ந்தது.

அதைத் திறந்து படித்தவள் ரமேஷிடம் தந்தாள்.

அன்புள்ள மகளே,
[illegible] ஆராய்ச்சிக்கூடத்தில் [illegible] ஆபத்து [illegible] [illegible] தெரிந்தும் [illegible] பாதியில் [illegible]. அதைப் [illegible] வெற்றி [illegible] மனைவியிடம் [illegible] [illegible] என் [illegible] தேசத் துரோகிகள் [illegible] என் ஆராய்ச்சி [illegible] [illegible] இந்த [illegible] விடு...

கடிதத்துடன் ரமேஷும் மாலதியும் உடனே போலீஸ் அதிகாரியிடம் சென்றனர். அவர் அதைப் படிக்க, நடந்ததைக் கூறினான் ரமேஷ்.

இதற்காகத்தான் அன்று இரவு சர்மா வீட்டினுள் நான் நுழைந்தேன். பேராசிரியரை எச்சரிக்க... ஆனால்...

ஸாரி, மிஸ்டர் ரமேஷ். உங்களைக் கைது செய்து ரொம்பக் கஷ்டப் படுத்திட்டோம்.

மாலதியும் ரமேஷும் பங்களாவுக்குத் திரும்பினர். காலாற சற்று நடந்து விட்டு வருவதாக அவளிடம் சொல்லிவிட்டு கேட் வரை வந்தான் ரமேஷ். அங்கே XX2 காத்திருந்தார்.

ரொம்ப சந்தோஷம். எல்லாம் நல்லபடியாக முடிந்தது. துரோகிகள் கைப்பற்றப் பட்டனர். சர்மாவின் ஆராய்ச்சி ரகசியம் அவருடனேயே புதையுண்டு போயிற்று. நீயும் ஒற்றன் என்பதை யாருக்கும் வெளிக் காட்டிக்கொள்ளாது அதை ரகசியமாகவே காத்திருக்கிறாய் கங்கிராட்ஸ்.

தாங்க்யூ ஸார். இனி நான்... இனி ஒற்றனும் வேண்டாம்...

இராதே. நீ காதல் வயப் பட்டிருக்கிறாய். மாலதியைக் கல்யாணம் செய்து கொண்டு தேனிலவுக்குக் கிளம்பு... டாட்டா...

(முற்றும்)

* இந்தியாவிலேயே ஆஜ்மீரின் அருகிலுள்ள புஷ்கர் என்ற இடத்தில்தான் பிரம்மாவுக்குக் கோயில் உள்ளது. கோயில் பிராகாரம் முழுவதிலும், ஒரு ரூபாய், நான்கு அணா, எட்டணா நாணயங்கள் தரையோடு பதித்து வைத்துள்ளது அருமையான காட்சி.

*

* ஜெய்பூரிலுள்ள ஆம்பர் மாளிகையில் ராஜா சவாய் மான்சிங் கொண்டு வந்த வெற்றிப் பரிசு காளி சிலை உள்ளது. இதை எல்லோரும் 'சிலா தேவி' கோயில் என்று அழைக்கிறார்கள். இந்தக் காளிக்குத் தினமும் விஸ்கியும் பிராந்தியும் படைக்கிறார்கள். -சிக்கி

# நற்பணி காணப் பொறுக்கவில்லையா?

● ஹண்டேயைப் பற்றிய கார்ட்டூன் கண்டேன். மனமகிழ்வு கொண்டேன். ஆனால் கருணாநிதி பதுங்கிப் பாயும் புலி நினைவிருக்கட்டும்!

மதுரை-9 திசைமுத்து

● அண்ணாநகரில் ஹண்டே டெபாஸிட் தொகையை முதலில் திரும்பப் பெறுவாரா என்பதே பெரிய கேள்விக் குறி. அவ்வாறிருக்க கலைஞரும் உடன்பிறப்பும் பயப்படுகிற மாதிரி வரையப்பட்ட உமது கார்ட்டூனைப் பார்த்ததுடன் சிரிப்புப் பொத்துக் கொண்டு வந்தது!

வேலூர் (சேலம்) கவிப்பிரியா

● தலையங்கத்தில் மனித உரிமைகளைத் துச்சமென மதிக்கும் ஈரானுக்குச் சரியான பாடம் புகட்டினீர்கள். அமெரிக்கர்களுக்கு நமது ஆதரவைக் கொடுப் போம். எண்ணெயை வைத்துக்கொண்டு உலகையே மிரட்டும் நாடுகளைச் சரியாகப் புரிந்துகொள்வோம்.

சென்னை-21 ஜெயசந்திர பாண்டியன்

● செம்பியன் இன்றைய கல்வியில் +2 கணக்குப் பரீட்சை பற்றி எழுதியிருப்பதைப் படித்தேன். மாணவர்களைப் பரிசோதனைச் சாலையில் ''கினியா பன்றி''களைச் சோதனை செய்வது போல் பரீட்சைக் காலத்தில் சோதிக்கிறார்கள். 1947க்குப் பிறகு கல்வித் துறையில் சீர்திருத்தம் என்ற பெயரில் பரிசோதனை செய்து செய்து ''செய்து கொண்டே''தான் இருக்கிறார்கள். உருப்படியான பலன் விளைந்ததோ என்றும் பூஜ்யம்தான். ராஜாஜி இருந்தால் ரத்தக் கண்ணீர் வடித்திருப்பார்.

மதுரை—2 பி. ஸ்ரீதர்

● நட்சத்திர வடிவம் போட்டி கல்கியில் தரத்துக்கு உகந்தது இல்லை என்ற வாசகரின் ஆதங்கத்துக்குப் பதில் தரும்போது காரணத்தைக் கண்ணியமாய் ஒப்புக்கொண்டு விட்ட ஆசிரியருக்கு நன்றி. ஆனாலும் இத்தகைய தர மேன்மை இல்லாத போட்டிகளுக்குப் பதிலாய் வியாபாரக் கண்ணோட்டத்துடன் தரமான உத்திகள் கூட உண்டு.

லக்னோ டி. ஆர். பத்மா

● என்னைப் போன்றவர்கள் சர்க்குலேட்டிங் லைப்ரரி நடத்துவதை விடத் தயாராக உள்ளோம், கல்கி முதலிய வார இதழ்கள் விலையை 25 பைசாவாகக் குறைத்தால். மாத இதழ்கள் 50 பைசாவுக்கு விற்கட்டும். நாங்கள் குறைந்த செலவில் நிறையப் புத்தகங்களை வாங்கிச் சமூக சேவை செய்கிறோம். அது உங்களுக்குப் பொறுக்கவில்லையா?

சங்கரன்கோயில் என். குருநாதன்

[தங்கள் பணியை நிச்சயமாகக் குறைத்து மதிப்பிடவில்லை. சர்குலேட்டிங் லைப்ரரிகளே தமிழகத்தில் பல லட்சக் கணக்கில் பெருகி விட்டால் எங்களுக்கும் பிரச்னை இல்லை. மகிழ்ச்சியே. பத்திரிகைகளின் விலை குறைய பத்திரிகைக் காகித இறக்குமதி அரசு நிறுவனங்களின் பிடியிலிருந்து விடுபடுவதுடன் சர்வ தேச மார்க்கெட்டில் அதன் விலையும் குறைய வேண்டும்.

ஆர்.]

● விருந்தும் மருந்தும் மூன்று நாள்தான் என்பது பழமொழி. அப்பழமொழி உங்களுக்கு உண்மையாகி விட்டது. நான்கு இதழ்களாகப் பளபளக்கும் வார்னிஷ் அட்டையால் எங்களை மயக்கிவிட்டுக் கல்கிக்கே புதுப் பொலிவு சேர்த்துவிட்டு, திடீரென வார்னிஷ் இல்லாமல் அட்டையைப் பார்த்ததும் உங்கள் மேல் கோபம் வரத்தான் செய்கிறது.

சென்னை— 4 மயிலை ரகு

[சற்றும் எதிர்பாராத காரணங்களால் 11—5—80 இதழ் மேலட்டைக்கு வார்னிஷ் தர முடியாது போயிற்று. இனி ஒவ்வொரு இதழிலும் வார்னிஷ் அட்டை உண்டு.

-ஆர்.]



## வட்ட மேஜை

● அ. டலசிம்மன் தம் கடிதத்தில் ''உங்கள் பத்திரிகையில் வரும் கதைகள் ஆபாசமாக இருக்கின்றன. படங்கள் அதைவிட மோசம்'' என்று சாடியுள்ளாரே அந்தக் கடிதத்தைக் கல்கிக்குத் தவறுதலாகப் போஸ்டு செய்து விட்டாரா? கல்கியில் ஜெயராஜ் படம் போட்டால் கூடப் பண்பாகத்தான் போடுவார். ஆசார்ய ரஜனீஷுக்கு வக்காலத்து வாங்குகிற ஜோரில் நல்ல படங்கள் கூட அவர் கண்ணுக்கு ஆபாசமாகத் தெரிகிறதோ என்னவோ?

சென்னை—4 வெ. முத்துகிருஷ்ணன்

● கவிஞரின் ஆதங்கத்துக்குச் சில காரணங்களைக் கற்பித்து வீணாக அவர் கலங்க வேண்டிய அவசியமில்லை. கவிஞர் இந்தத் தேசத்துக்குப் போதிக்க வேண்டிய பாடங்கள் உணர்த்த வேண்டிய தத்துவங்கள் இன்னும் நிறைய உள்ளன. அவை யெல்லாம் முற்றுப் பெறும் வரை கவிஞரின் உடம்பு போலவே அவரது மனமும் என்றும் இளமையுடன் செயலாற்றும்!

மைசூர் தங்கவேலு

நீங்கள் எக்காலத்துக்கும் ஏற்றவர்.
ஆகையால் தான் எக்காலமும் நீங்கள்
பெருமையுடன் அணிந்திட ஒரு விசேஷ
வொர்ஸ்டட் சூட்டிங்கை தயாரித்தோம்.



# விமல் அறிமுகப்படுத்தும்

# ஆல்டைம்ஸ்

## முதன்முதலான

## முழு-வருட வொர்ஸ்டட் சூட்டிங்

---

**இழை - இந்தியாவின் அதிநவீனமான 'ஸ்பின்னிங்' ஆலையிலிருந்து**

ரிலையன்ஸ் டெக்ஸ்டைல்சாரின் ரூ. 18.5 கோடி முதலீட்டில் ,ரம்பிக்கப்பட்டிருக்கும் 'ஸ்பின்னிங்' ஆலையில் தயாரிக்கப்படும் இழை பல சிறப்புகளைக் கொண்டது.

'ஆப்டிகல் எலக்டிரானிக் கிளியரிங் டிவைஸ்'

எனப்படும் விஞ்ஞான ரீதியான முறை நம்நாட்டில் முதல் தடவையாக உபயோகப் படுத்தபபடுகிறது. இழையின் தரத்தைக் கூட்டுகிறது.

சகல வசதிகளும் கொண்ட எமது ஆராய்ச்சிக் கூடத்தில் தயாரிப்பின் ஒவ்வொரு கட்டத்திலும் இழை தரப் பரிட்சைக்கு உட்படுத்தப் படுகிறது. இதனால் விமல் இழை அனைத்துலகத்திலும் தயாரிக்கப்படும் தரமான இழைகளுக்கு நிகராக விளங்குகிறது.

**ஆல்டைம்ஸ் சூட்டிங். இந்தியாவின் அதிநவீனமான நெசவாலையிலிருந்து**

இழை மற்றும் துணி தயாரிப்புகளில் கையாளப்படும் நவீன, விஞ்ஞான ரீதியான உக்திகளால் ஆல்டைம்ஸ் இந்திய பருவ நிலைகளுக்கேற்ற வொர்ஸ்டட் சூட்டிங்காக விளங்குகிறது. 365 நாட்களும் அணிந்து மகிழலாம்.




# நிகரற்ற விமல்

## சர்வதேசத் தரம் கொண்டது

# இதயச் சமவெளியில் ஒரு கனவு மாளிகை

கார்த்திகா ராஜ்குமார்

ஏ.ஸி.யின் குளுமை. அதைவிட என்மனம் குளிர்ந்துபோய் இருந்தது. நான் கவனிக்க வேண்டிய ஃபைல்கள் இத்யாதிகள் என்னை ஏக்கமாய்ப் பார்த்துக் கொண்டிருக்க...

என் மனத்தில் அந்தப் பெயர் தெரியாத அழகுத் தேவதையின் நினைவுகள், வண்ணப் பூக்களாய் என் இதயச் சமவெளியில் இனிமையாய்ப் பூத்துக் குலுங்கி நறுமணம் வீச ஆரம்பித்திருக்கின்றன.

அவளை முதல் தடவையாகப் பார்த்த நினைப்புக்கள் இருபத்தி ஆறுவது(!) தடவையாக Flash Black ஆகியும்கூட, ஒவ்வொரு தடவையிலும் இதயத்தின் 'பெரிகார்டியம்' சோதிக்கப்படுமளவுக்குப் பூரித்து, சந்தோஷம் பிரவாகமாகி, இதயம் ஊக்க போனஸைப் பெற்றுவிட்டதைப் போல் 'லப்' டப்' மிக வேகமாய் அதிகரித்து...

சேரனின் தலைமையகத்துக்கு கம்பெனி விஷயமாகச் சென்றுவிட்டு, என் புதிய விஜய்யில் சாவகாசமாகத் திரும்பி வந்து கொண்டிருந்தபொழுது, அவினாசிலிங்கம் கல்லூரியிலிருந்து வெளிவந்து கொண்டிருந்த பட்டாம்பூச்சிக் கும்பல்களில்...

அவள் மட்டும் மிகத் தனியாய்த் தெரிந்து... என்னை ஊடுருவினாள். விஜய்யின் வேகத்தைத் தணித்து நிறுத்தினேன்.

கம்பீரமான உயரம். கருப்பில் மெல்லிதாய் வெள்ளையில் போட்ட சின்னக் கட்டங்களுள்ள கட்டாங் ஸாரி. அதே நிறத்தில் அமைந்த அவளது மற்றவை, அவளின் சந்தன நிறத்தைப் பெருமையுடன் அதிகப்படுத்திக் காட்டிக் கொண்டிருந்தன. மாசு மறுவற்ற முகத்தில் படபடத்த இமைகளும், அந்த அதரங்களும்....

(மன்னியுங்கள்! எவ்வளவு அழகென்று அப்படியே சொல்லத் தெரியவில்லை)

அவள் என்னைக் கடந்து போனதும், நான் திடுமென்று மறுபடி இந்த உலகிற்குள் பிரவேசித்து... ஓ! அவள்! அந்த அழகுத் தேவதை யார்?

அன்றிரவு. மொட்டை மாடி. நிலவின் இதம். காற்றின் குளுமை என் உடம்பை வருட, என் இதயத்தில் நெருடிய அவளைப் பற்றிய சிந்தனைகள்... அன்று என் வாழ்க்கையில் பல 'முதல்'கள்!

முதல் தடவையாக என் இருபத்தி எட்டு வயது வாழ்க்கையில், ஒரு பெண்ணைப் பற்றிச் சிந்திக்க ஆரம்பித்திருக்கிறேன்.

முதல் முறையாக முன் பின் அறிமுகமில்லாத ஒருத்தியைப் பார்த்ததும், இப்படிப் பாதிப்படைந்து போய், 'விஜய்'யை நிறுத்தி அவளைப் பார்த்து மயங்கிப்போய்...

இப்படிப்பல 'முதல்'கள்... தொடர்கிறது. ரொம்பவும் விசித்திரமாய்த் தெரிகிறது— இது எப்படிச் சாத்தியமென்று யோசித்துப் பார்த்தால்.... சில கணங்களுக்கு மேல் பார்க்காத அவள், இப்படி அநியாயமாக என்



மனத்தில் பதிந்துபோய், அவளின் நினைவுகள் என் பொழுதுகளை ஆக்கிரமிப்பது ரொம்பவும் ஆச்சரியமாய் இருக்கிறது....!

''சார்.... சார்... டைம் ஆயிடுச்சு... போகலையா நீங்க...''

அவள் நினைவுகளிலிருந்து என்னைப் பலவந்தமாய் என்னை விடுவித்துக் கொண்டு, நிமிர்ந்து பார்க்கிறேன்.

ஆபீஸ் பியூன் சுதர்சனம் என்னை விநோதமாய்ப் பார்க்கிறான்.

ஒரு தர்மசங்கட அசட்டுப் புன்னகையால் அவனை மறுபடியுமாகக் குழப்பிவிட்டு, வெளியில் வந்து என் விஜய்யை நெருங்கி....

அவளைப் பார்க்க வேண்டும், மீண்டும் என்று நுரைத்துக் கொண்டு கிளம்புகிற ஆசைகள்! மை குட்னஸ்! இதென்ன இது! 'காலேஜ் ஸ்டுடண்ட்' காதலனின் மனநிலை போல.... எங்கும் போய் அவளைத் தேடி... இதெல்லாம் ஆகிற காரியமா? 'அதுவும் கோவையின் ஒரு பெரிய ஃபார்மின் 'சீஃப் கெமிகல் என்ஜினியர்',நானு இலக்கத்தில் சம்பளம் வாங்கும் ஒரு ரெஸ்பான்ஸிபிள் பெர்ஸன், இப்படி மாணவத்தனமாக, பெயர் தெரியாத ஒருத்திக்காக அலைவதா....?

என் அறிவு விழித்துக் கொண்டு என் ஈகோவைப் பறைசாற்றி என் மனத்தை இப்படித் திட்ட, என் மனம் அந்தத் திட்டுகளை அலட்சியம் செய்துவிட்டு, 'அப்படித்தான் போக வேண்டு'மென்றது.

விடாமுயற்சியினால் அடுத்த நாள் பூரித்துப் போனேன், அந்த அழகுத் தேவதையைப் பழைய இடத்திலேயே கண்டு கொண்டவுடன்;

இன்று வெளிர் நீல வாயிலில் மலர்ந்திருந்த பூக்குவியல்களிடையே இருந்தவள், சட்டென்று என்னைக் கவனித்தவுடன் அவள் பார்வை என் மேல் ஒரு கணம் நின்றது. அதற்குத் துணையாக என் இதயமும் அந்தக் கணமே நின்றுவிட்டு, அவள் பார்வையை மீட்டுக் கொண்டு திரும்பியதும், மகிழ்ச்சியில் துள்ள ஆரம்பித்தது.

இரவு, என் இதயத்தை ஒரு கணம் நிறுத்திய அவள் பார்வை பற்றி என் டைரியில் இரண்டு பக்கங்கள் எழுதிவிட்டு, மொட்டை

மாடிச் சுவரில் வந்து உட்கார்ந்து கொண்டேன். அவளைப் பற்றிய நினைவுகள் என் மனத்தில் கதகதப்பை உற்பத்தி பண்ண, அவளைப் பற்றிக் கவிதை எழுதினால் என்ன?

எப்படி ஆரம்பிப்பது? அவளின் அழகு நிலா முகம், என் இதயச் சமவெளியில் மென்மையைப் பரப்ப, அதில் என் இதயத் தோட்டத்தில் பூத்திருந்த நினைவு மலர்களின் சுகந்தமான வாசகங்கள் என்னுள் நிறைய...அவளைப் பற்றி ஆங்கிலக் கவிதை ஒன்று எழுதினேன்....

அலாதியான திருப்தி...திருப்தி...திருப்தி.

இனி என்னுடைய எதிர்கால நடவடிக்கைகள்?

இனி தினமும் மாலையில் மட்டும், பழைய இடத்திலேயே சந்திக்க வேண்டும். வெகு கண்ணியமான பார்வையுடன், முக மலர்ச்சியாக அவளுக்காகக் காத்திருப்பதை, விரும்புவதை உணர்த்த வேண்டும்.

நிதானம். அவளும் என்னைக் காதலிக்கிறாள் என்பதைத் தெரிந்து கொள்ளும்வரை, பொறுமை மிகுந்த நிதானம் — அவசியம்.

**எ**ன் கனவு மாளிகைக்கு அஸ்திவார வேலைகள் ஆரம்பமாகி யிருந்தன. தினமும் அவளைப் பார்ப்பது என் அத்தியாவசியக் கடமையாகி விட்டிருந்தது.

ஜூலை — டிசம்பராகியது. அன்று என் தங்கை ப்ரியா கொண்டு வந்த காலேஜ் மாகசினைப் புரட்டியபோது ஒரு சந்தோஷக் கத்தி என்னுள் வேகமாகப் பாய்ந்தது.

என்னுடைய அழகிய தேவதையின் படத்தைப் போட்டு அனிதா — மூன்றுமாண்டு ஆங்கில இலக்கியம் — அனைத்துக் கல்லூரிகளுக்கான சிறுகதைப் போட்டியில் முதல் பரிசு....'

---

1606 ஆம் ஆண்டு செப்டம்பர் 14ந் தேதி பிரான்ஸ் அரசி மேரிடி மெடிசி அணிந்து கொண்ட உடைதான், உலகிலேயே இதுவரை அணிந்த ஆடைகளில் அதிக மதிப்பு பெற்றதாகும். அதில் 50 பவுண்டு எடைக்கு 39,000 முத்துகளும், 3,000 வைரங்களும் வைத்துப் பூவேலை செய்யப்பட்டிருந்தன. அப்போதே 20 மில்லியன் டாலர்கள் மதிப்பாகும். ராணி இந்த உடையைத் தன் மகனின் பெயர் சூட்டு விழாவுக்கு அணிந்துகொண்டாள்.

—குபிலி ராஜேஸ்வரி



அனிதா...அனிதா...அனி... இந்த நான்கெழுத்துப் பெயர் பியானோவின் இனிமைகளை என் இதயத்தில் கூட்டிக் காட்ட... 'அனிதா... அனி...தா.... மிக இனிமையாய், சந்தோஷமாய் எனக்குள் உச்சரித்துக் கொண்டு....

**அ**ன்றைக்குச் சாயங்காலம்.

'ஒரு பாக்கெட் சிக்லெட் — ஒரு டாலர் + நிறைய மல்லிகைப் பூ + ஐஸ் இத்தனை பொருள்களும் ப்ரியாவன் வாயிலிருந்து அனிதாவைப் பற்றிய விவரங்களைச் சந்தோஷமாய் வரவழைத்தன.

''அண்ணா... அனி எங்களுக்கு இரண்டு வருஷம் சீனியர். ரொம்ப ஸ்வீட் கேர்ள்ணா அது. என்னமா பழகும் தெரியுமா? ஜூனியர்ஸ் தானே நாங்க... எங்க கூட வந்து ஒக்காந்து ஸ்வீட்டாச் சிரிச்சுப் பேசும். கதை எழுதும்.''

விண் வெளியில் சில கணங்கள் சஞ்சாரத்துக்குப் பின் இறங்கி வந்தேன். ஆனந்தம், பூரிப்பு, பரவசம் இதற்கெல்லாம் தெளிவான அர்த்தங்களை உணர்ந்தேன்.

என் விஜய்யில் அதிகமாய் எனக்குப் பிடித்த ஆலிவ் க்ரீன் விஜய்யில் அடுத்த நாளே 'அனிதா' என்று சிவப்பாய் எழுதி, வியப்புடன் பார்த்த ப்ரியாவிடம் பொய்க் காரணங்களைச் சொல்லி மழுப்பி, குழப்பி... நான் மட்டும் அதைப் படித்து, அதன் இனிமையை ரசித்து...! ஓ இந்தக் காதலே ஒரு வகையில் பைத்தியக்காரத்தனமோ! ஆம். சந்தோஷமான பைத்தியக்காரத்தனம்.

அன்று அனிதாவின் பார்வை என் மேல் விழுந்து, கடந்து, தற்செயலாய் என் விஜய்யின் 'அனிதா' மேல் படிய, ஆச்சர்யமாய் நிமிர்ந்து என்னைப் பார்த்தாள். என் புன்னகையையும் பார்த்தவள், முகம் சிவந்து போய், நடக்க... அதில் ஓர் அர்த்தமில்லாத சந்தோஷங்கள் எனக்குள்.

என் அலுவலக அறையில் உட்கார்ந்து கொண்டு, காலேஜ் மகாசினில், மெல்லிதாய் அனிதா என்னைப் பார்த்துச் சிரித்துக் கொண்டிருக்க... வெறும் பார்வைகளாலேயே என்னைக் கொள்ளை கொண்டு, ஆக்கிரமித்து என்னை ஏங்க வைத்த அனிதாவுக்காய், என் இதயச் சமவெளியில் பிரம்மாண்டமாய் எழுந்திருந்த கனவு மாளிகைகளில் அவளின் பார்வைகளால் மலர்ந்திருந்த வண்ணப் பூக்களின் நடுவே ஆனந்தமாய்ச் சஞ்சரித்து..

இரவு நேரங்களை மட்டுமில்லாது, இப்பொழுதெல்லாம் என் வேலை நேரங்களைக் கூட அடிக்கடி திருடிக் கொள்ளும் அவள் நினைவுகளைச் செல்லமாய்க் கோபித்துக் கொண்டிருந்தபொழுது...

**''சா**ர்... சார்....''

அவள் நினைவுகளை விட்டு நிமிர்ந்தேன். அஸிஸ்டெண்ட் அக்கவுண்டெண்ட் வேதாந்தம் வந்து ''என்ன சார் ரொம்ப இண்ட்ரஸ்டாப் படிக்கிறீங்க போல....'' என்றபடி, என் டேபிள் மேலிருந்த மேகசின் அவர் பார்வை மேய....

''ஓ... ஒன்றுமில்லை மிஸ்டர் வேதாந்தம். என் ஸிஸ்டரோட பிரெண்ட் கதை வந்

திருக்காம் இதிலே. நல்லாயிருக்கு படின்னு அவ குடுத்தா...அதுதான்..'' என்று அசடு வழிந்துவிட்டு மேகசீனை அவரிடம் காட்டி, டேபிளின் மீது போட்ட போது வேதாந்தம் சிரித்தபடி, அனிதாவைக் காட்டி, ''இது யாரு தெரியுமா சார்?'' என்றார்.

''யா...யாரு மிஸ்டர் வேதாந்தம் தெரியலையே...''

''என்ன சார் இப்படிச் சொல்லிட்டீங்க? அடையாளம், முக ஜாடை தெரியலே. அனிதா என் மூத்த பொண்ணு சார். இங்க தான் அவிநாசிலிங்கத்திலே படிக்கிறா....'' என்றார் பெருமையுடன்.

ஷாக்! இந்த வேதாந்தமா என் கனவுத் தேவதையின் அப்பா?

''என்னங்க... உட்காருங்க...நின்னுட்டே பேசிட்டு இருக்கீங்க.... டேக் யுவர் ஸீட் ப்ளீஸ்.''

என் திடீர் மரியாதைகளில் அவர் அசந்து போனார். பயந்தும் போனார்.

சில மாமூல் விசாரிப்புக்களுக்குப் பின் :

''உங்க வீடு எங்கேங்க... இருக்கு?''

''துடியலூர்லே சார்....''

''அங்க எங்கே ரொம்பத் தூரமோ?''

''இல்லே சார். டவுன் பஸ் வந்து நிக்கு தில்லெ... கொஞ்சம் தள்ளி ஒரு ரோடு பிரியுதே...அங்கிருந்து ஒருஐஞ்சு நிமிஷ நடை''

குப்பென்று ஒரு சந்தோஷமான குறு-குறுப்பு. சில நிமிட மௌனம்.

''இங்க பாருங்க. மிஸ்டர் வே..தாந்தம்... (மனத்திற்குள் மாமா) உங்களுக்கு எப்போ என்ன உதவி வேணும்னாலும் என்கிட்டத் தயங்காமக் கேளுங்க.... நிச்சயமா என்னாலே முடிஞ்சதைக் கண்டிப்பாச் செய்வேன்.''

வேதாந்தம் உணர்ச்சி வசப்பட்டு மகிழ்ந்து போனார்.

''சார்! கண்டிப்பா நீங்க ஒரு நாள் வீட்டுக்கு வரணும்'' என்றார் உணர்ச்சியுடன்.

''நிச்சயமா வருவேன்'' என்று ஸ்பெக்ஸைக் கழற்றித் துடைத்துப் போட்டுக் கொண்டு, ''அதுவும் கூடிய சீக்கிரமே'' என்றேன் அர்த்தபுஷ்டியோடு.

வேதாந்தம் எதுவும் புரியாமலேயே சிரித்தார், வாய் நிறைய.

இனியும் தாமதிப்பதில் அர்த்தமில்லே. இனி போக வேண்டியதுதான். போய் அனிதாவைப் பெண் கேட்க வேண்டியதுதான். என்னுடைய ஒரு வருட இனிய காதல் வாழ்க்கைக்குச் சுபமான முடிவோ?

வேதாந்தத்துக்கு என்னைக் கசக்குமா என்ன?

அடுத்த நாள் லீவ் அப்ளை பண்ணியாயிற்று. கறுகறுப்பாய், பரபரப்புடன் பள்ளி எழுச்சி. 'பால்மோலிவ் ஷேவ்'. என் காதலுக்குச் சாட்சியாய், நடமாடிய அத்தாட்சியாய் இருந்த என் விஜய்யைக் கழுவினேன். சிவப்பு எழுத்துக்களாய் இருந்த அனிதாவைக் காதலாய்ப் பார்த்து, செல்லத் தட்டுத் தட்டினேன்.

லெமன் எல்லோ, ரியல் ஸ்பைன் நிட்டட் ஷர்ட், க்ரீம் கலர் பெல்ஸ். 'இன்' பண்ணிக் கொண்டு, 'இன்டிமேட்'டை என் மேல் தெளித்தபொழுது வந்த ப்ரியா வியந்து போனாள்.



ரஷ்யாவில் பக்ஷிசாய என்ற பட்டிணத்தில் கான் அப்துல்கிஷ்ரி என ஒருவர் இருந்தார். அவருடைய காதலி இறந்துவிட்டாள். மனம் ஒடிந்து போன அவர் துக்கத்தின் சின்னமாகத் தம்மிடம் உள்ள நூறு அடிமைகளை வேறு எந்த வேலையும் செய்யாமல் காதலிக்காகக் கண்ணீர் வடிக்க உத்தரவிட்டாராம். இதுவும் போறாது என அவனுக்குத் தோன்றியது. உடனடியாக ஒரு ஃபௌண்டன் கட்டச்செய்தார். அது கண்ணீர் போல் ஒவ்வொரு விநாடியும் ஒரு சொட்டு நீரை வெளிவிடும். கடந்த 450 வருடங்களாகக் காதலின் சின்னமாக இது கண்ணீர் விட்டுக்கொண்டிருக்கிறது. —குமிலி ராஜேஸ்வரி

◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆◇◆

''அன்னு என்ன விசேஷம்? ஜம்முன்னு கிளம்பிட்டே? அட! ஒரிஜினலாகவே இல்லாத சித்திரங்கள் பாக்யராஜ்தான் போ. கண்ணாடி கூட அப்படித்தான்.''

திருப்தியான சந்தோஷம். ஒரு பத்து ரூபாயை நீட்டி அவளை வாயைப் பொத்த வைத்துவிட்டு, விஜய்யை நோக்கி நடந்த பொழுது....

அனிதாவுக்குக் கொடுப்பதற்காக வாங்கியிருந்த பெரிய ரோஜா மலர்க் கொத்தின் மேல், ஒரு தடவை அனிதாவைப் பற்றி எழுதி வைத்திருந்த ஆங்கிலக் கவிதையை அழகாக எழுதி இணைத்திருந்தேன்.

மென்மையாய் அதன் மேல் முத்தங்கள்.

என் விஜய் உற்சாகமாய்க் கிளம்பியது. துடியலூரை நெருங்கிக் கொண்டிருந்த பொழுது எதிரே வேதாந்தம். என்னைப் பார்த்தவுடன் தயக்கம்.

''குட் மார்னிங் ஸார்....''

''யெஸ் வெரி குட்மார்னிங்....''

''என்ன ஸார், மாப்பிள்ளை மாதிரி கிளம்பிட்டீங்க, ஜம்முன்னு!''

ஜில்லென்றிருந்தது. சந்தோஷமாய்ச் சிரித்தேன்.

''அப்படித்தான்னு வையுங்களேன்...''

''சார் ஒரு தயவு செய்யணும். தப்பா நினைக்கலாகாது. நீங்கதான் எதாவது உதவி வேணும்னு கேட்கச் சொல்லியிருக்கீங்களே.. இன்னும் மூணு வாரத்திலே அனிதாவுக்குக் கல்யாணம். பண முடை. அவசரமாத் தேவைப்படுது... லோனுக்கு மானேஜர் [illegible]

அந்தச் சாதாரண வார்த்தைகள் என்னை மிகப்பலமாய்த் தாக்கின.

''எ...என்னசொல்றீங்க வேதாந்தம்?''

''உங்க கிட்டப் பேசிட்டுப் போன அடுத்த நாள்தான் நிச்சயம். மாப்பிள்ளை பேங்கிலே வேலை... கை நிறையச் சம்பளம். எங்களுக்கு ரொம்ப வேண்டியவங்க கூட....''

''உங்க பொண்ணு விருப்பம் எப்படி?'' பலஹீனமான கேள்வி...

''அவளுக்குப் புடிச்சுடுச்சு சார். நான் இன்விடேஷனை ஆபீசுக்குக் கொண்டு வரேன். சார், நான் சொன்னதைச் செய்யறீங்களா?''

''சரி... நான் கண்டிப்பா செய்யறேன்.''

என் குரல் சத்தியமாய்த் தளும்ப ஆரம்பித்தது. என் இதயம் ஊமை அழுகையாய் விம்ம ஆரம்பித்தது. சோகமாய் என் விஜய்யைத் திருப்பினேன்.

''என்ன சார், திரும்பிப் போறீங்க...'' என்று வேதாந்தம் கேட்க, -'இனி நான் போக வேண்டிய அவசியமில்லே.'' என்று நா தழுதழுக்கச் சொல்லிவிட்டு, கிளம்பிய பொழுது என்னை அறியாமல் பெருகிய கண்ணீர்த் துளிகள் என் ஸ்பெக்ஸில் விழ, இதயம் இரும்பாய்க் கனத்துப் போனது.

யாரிடமாவது சொல்லி அழ வேண்டும் போல உந்துதல்கள்... ஆனால் அப்படிச் சொல்லுமளவுக்கு நெருங்கியவர்கள்?

'அனிதா! My Sweet Angel! How can I forget you! You are toolate! என்று என் மனம் கூக்குரலிட்டு விம்மியது. நான் ஏன் இவ்வளவு தாமதித்தேன்? கைக்கெட்டியது வாய்க்கெட்டாத நிலையாக...

ஓ! குட் காட்! என் விஜய்யைக் கட்டுப்படுத்துவதற்குள் அந்தக் கல்லின் மேல் மோதி.... உடலெங்கும் விண் விண்ணென்று தெறிக்கத் தள்ளாடியபடி எழுந்தேன். என பிரிய விஜய்யின் முன் பக்கம் நசுங்கிப் போய், 'அனிதா' தேய்ந்து ஒடுங்கிப் போய்...

அனிதாவுக்கென்று நான் கொண்டு சென்ற மலர்க் கொத்து விஜய்யின் அடியில் பரிதாபமாய்க் கிடக்க...

எவ்வளவு முன் ஜாக்கிரதையாக, எப்படியெல்லாம் திட்டமிட்டு வளர்த்த என் காதல்! அவளின் பார்வைகள்! எல்லாமே என்ன வாயிற்று?

இந்தப் பெரிய சூறாவளி என் கனவு மாளிகையைத் தகர்த்து வண்ண மயமாய் இருந்த இதயச் சமவெளியைப் பாலைவனமாக்கிச் சூன்யமாக்கிக் கொண்டிருந்தது. ஊமையின் ரணமான வேதனைகள், என் இதயத்தின் விம்மல்களாய் மாறி, என் கண்ணீர்த் துளிகளாய் உதிர்ந்து போயிருந்த மலர்க் கொத்தின் மேல் விழ ஆரம்பித்தன.

---

சிலை கூறுகிறது: ''தர்ம ராஜா'' என்ற வண்ணப் படத்துக்கு நான்தான் மெய்யான ஹீரோ. நான் இல்லையெனில் கதையே இல்லை. கதாநாயகனும், வில்லனும் போன நாடுகளுக்கெல்லாம் நானும் போகிறேன்.

மோட்டார் சைக்கிள் சண்டையிலும், ஹெலிகாப்டர் சண்டையிலும் டிஷ்யூம், டிஷ்யூம் கைகலப்பிலும் தப்பிப் பிழைத்த வில்லன் கடைசியில் என்னால்தான் இறக்கிறான். நான் அவன் தலையில் விழுந்து அவனைக் கொன்றுவிடுகிறேன். ஒரே ஒரு குறை. இன்னும் கொஞ்சம் முன்னாலேயே அவன் தலையில் விழுந்து கொன்றிருக்கலாமே என்றுதான் என் மேலே எல்லோருக்கும் கோபம்!

முதலில் கற்பழிப்பு, பிறகு ஒரு கொலை, இந்தப் படத்தில் எல்லாம் இருக்கிறது. காதல் இருக்கிறது; மோதல் இருக்கிறது; ஊடல் இருக்கிறது; சாதல் இருக்கிறது; சிங்கப்பூர், ஹாங்காங், ஜப்பான் ஆகிய நாடுகளில் நடக்கும் நடனங்கள், அவற்றுக்கிடையே நடக்கும் கிளுகிளுப்பு எல்லாம் சேர்க்கப்பட வேண்டும் என்ற தீர்மானத்துடன் சேர்க்கப்பட்டிருக்கின்றன. கதாநாயகனுடன் விவாகத்துக்கு முன்பே கதாநாயகியும் வெளி நாடுகளுக்குப் போகிறாள். விதம் விதமான உடைகளில் வளைய வருகிறாள். வழக்கம் போல் கதாநாயகன் எல்லாச் சந்தர்ப்பங்களிலும் வெற்றி பெறுகிறான்.

படத்தின் டைரக்டர் எம். ஏ. திருமுகம். விசுவநாத்தின் ஒளிப் பதிவு பிரமாதம்!

சிவாஜிக்குக் கை கொடுக்கும் சோகரஸக் காட்சிகள் சிலவும் கே. ஆர். விஜயாவின் 'சிக்' உருவமும் இருக்கிறதோ படம் பிழைத்ததோ!

— காந்தன்



மிகப் பொருத்தமான
ஜோடி

இந்தியாவின் ஒரே துர்நாற்றமகற்றும்
சோப் மற்றும் பால்க்

துர்நாற்றத்திலிருந்து உங்கள் உடலுக்கு
இரட்டை பாதுகாப்பு. சிந்தால் சோப் குளியலும்
பின் சிந்தால் பவுடர் தூவலும்—ஆகா!
புத்துணர்ச்சியின் புதுச் சிகரத்தில்
நீங்கள் இருப்பீர்கள்!

—கோத்ரெஜ் வழங்கும் சிந்தால்




Interpub/CTS/I/80




ரஷீத் வீட்டு முற்றத்தில் சில கூழாங் கற்களை வீசினான் குல்தீப். மறு கணம் ஜன்னல் வழியாகத் தாவி வெளியே வந்தான் ரஷீத். இருவரும் போலோ தோட்டத்திற்கு விரைந்தனர். சிறிது தூரம் சென்றதும் குல்தீபின் தோளில் கையைப் போட்ட வண்ணமே நடந்து கொண்டிருந்த குல்தீப் அசையாமல் நின்றான். சித்தப்பா ஜகதா என்றால் அவர் அனைவருக்குமே சித்தப்பா தான். ஐம்பது வயது நிரம்பப் பெற்றவராக இருந்தாலும் அவர் இளமை முறுக்குடனிருந்தார். அவர் அணிந்திருக்கும் தலைப் பாகையில் தொங்கும் துணி அவரது கைவரை நீண்டிருக்கும். இடது கையில் துணியைப் பிடித்துக் கொண்டு வலது கையால் தமது மீசையை முறுக்கிய வண்ணம் இருப்பார். கிராமத்து மக்கள் அவரைக் கண்டால் கொஞ்சம் தள்ளியே நிற்பார்கள். மூர்க்க குணம் படைத்த அவர் யாருடனும் எந்த நேரத்திலும் சண்டை போடத் தயாராயிருப்பார். அவர் ஒரு சிறைக் குருவி. கல்லில் சேலை கட்டியிருந்தால் கூட அது ஒரு பெண்ணோ என்று பார்க்கும் காமாந்தகர். கிராமத்தில் உள்ள தெருக் கூட்டும் பெண்கள் செருப்புத் தைக்கும் பெண்கள், வயலில் வேலை செய்யும் பெண்கள் அனைவரையும் தன் காமப் பசிக்கு இரையாக்கியவர் அவர். வீட்டு வாசலில் ''ஜகதா தனியாக இருந்தால் அவருடன் பிறந்த சகோதரிகூட அந்த வீட்டுக்குள் போக மாட்டாள்'' என்று கிராம மக்கள் பேசுமளவுக்கு லீலா விநோதங்கள் புரிந்தவர். ரஷீதையும் அவனது அண்ணன் ஹமீதையும் ஜகதா எங்கு பார்த்தாலும் தமது மீசையை முறுக்கிக்கொண்டு அவர்களது தாயாரைப் பற்றி விசாரிப்பார்.

''நல்லது செல்வங்களே! அம்மா எப்படி இருக்கிறாள்? அவள் சௌகரியமாயிருப்பாள் என்று நம்புகிறேன். அவளை நான் விசாரித்ததாகச் சொல்லுங்கள். சித்தப்பா சலாம் செய்தார் என்று கூறுங்கள்'' என்பார்.

மறுமுறை சந்திக்கும்போது, ''ஏய் செவிட்டுப் பசங்களா! அம்மாவிடம் நான் சலாம் போட்டதைக் கூறினீர்களா?'' எனக் கேட்பார்.

''ஆம் சித்தப்பா. அம்மாவிடம் நீங்கள் விசாரித்ததாகக் கூறினோம். அம்மா 'ஆலேகம் சலாம்' என்று கூறுமாறு சொன்னாள்'' என்று ரஷீதும் ஹமீதும் கூறுவார்கள்.

அவ்வளவுதான். ஜகதாவின் முகம் மலர்ந்துவிடும். இருவரையும் முத்தமிடுவார். ''அம்மாவுக்கு ஏதாவது தேவையானால் ஜகத் சிங்கிடம் கேட்குமாறு கூறுங்கள். நான் எப்போதும் கிராமத்துக்கு வெளியே தான் இருப்பேன். நேரம் கிடைக்கும்போது அவளை அங்கே வரச் சொல்லுங்கள்'' என்பான்.

ரஷீதும் ஹமீதும் ஒரே மாதிரி ''சரி சித்தப்பா. அம்மாவிடம் சொல்கிறோம்'' எனப்பதிலிறுத்துவிட்டு விளையாடச் சென்றுவிடுவார்கள்.

அப்பொழுதெல்லாம் அவர் அம்மாவை வரச் சொல்வதின் கார



ணத்தை அவர்கள் அறியார்கள். எப்படித் தெரியும்? அன்று எல்லோருக்கும் மூத்தவனாக இருந்த ஹமீதுக்கு வயது எட்டுத்தான். ஆனால் இன்றோ இளையவன் ரஷீதுக்கே பன்னிரண்டு வயதாகிவிட்டது. சித்தப்பா ஜகதாவின் ஜகதலப் பிரதாபங்கள் அனைத்தையும் அவர்கள் தெரிந்து விட்டனர். அவனது கெட்ட நடவடிக்கைகள், அம்மாவுக்குச் செய்தி சொல்லி அனுப்புவதன் மர்மம் எல்லாமே அவர்களுக்குப் புரிந்து விட்டது. எனவேதான் ரஷீத் வேறு வழியாகச் செல்ல விழைந்தான். ஜகதாவைப் பார்ப்பது அவனுக்குப் பிடிக்கவில்லை.

ரஷீதின் தாயாருக்கு முப்பத்தைந்து வயதாகிறது. அவள் ஓர் அழகி. உயரமாகவும் ஒல்லியாகவும் இருப்பாள். அவளது கண்கள் அழகுக்கு அழகு செய்தன. கன்னங் கரேலென்ற அடர்த்தியான அவளது தலைமுடி கால் வரை நீண்டு தொங்கும். நடந்தால் பட்டத்து இளவரசி போன்றிருப்பாள். கூடையில் ரொட்டி, தலையில் மோர்ப் பானை- இவற்றுடன் அவள் வயல் பக்கம் சென்றால் வயல்களில் வேலை செய்யும் கிராம மக்கள் தங்கள் வேலையை நிறுத்திவிட்டு அவளது நடையலங்காரத்தையே பார்த்துக் கொண்டிருப்பார்கள். சிலர் கண்ணைச் சிமிட்டு வார்கள். சிலர் இருமுவார்கள். சிலர் அவளைக் கூப்பிடவும் தயங்க மாட்டார்கள். ரஷீதின் தாயாரோ யாரையும் சட்டை செய்யாமல் தன் வழியே போவாள். அந்த ஏழைப் பெண்ணால் வேறு என்ன செய்ய முடியும்? அவளது கணவன் காலமாகிப் பத்து ஆண்டுகளாகி விட்டன. கணவனுக்குப் பிறகு அவளைக் கவனிக்கச் சகோதரர்கள் யாருமில்லை. அவளது கவுரவத்தைக் காப்பாற்ற யாருமே இல்லை. அவளுக்கென்றிருந்த சொத்தெல்லாம் அந்த இரு பையன்கள் மட்டுமே. ஆண் துணை இல்லாத ஏழைப் பெண் என்றால் எல்லோருக்கும் கொஞ்சம் இளப்பம் தானே?

உடம்பையும் உயிரையும் பாதுகாத்துக் கொள்வதற்காக ரஷீதின் தாயார் வீட்டு வேலைகளைச் செய்தாள். அறுவடைக் காலங்களில் வயல் வேலையையும் செய்து வந்தாள். கிராமத்து வம்பர்கள் அவளைப் பற்றி ஏதேதோ பேசுவார்கள். ஆனால் அவளோ செய்யும் வேலைக்குக் கிடைக்கும் கூலியை வைத்து வாழ்ந்து வந்தாள். பிள்ளைகளை வளர்த்தாள்

தமிழாக்கம்: எஸ். வேலாயுதம்

மனித உருவில் வாழும் கிராமத்துப் பன்றிகள் ஏதாவது பேசும்போது ரஷீதின் கண்ணங்கள் கன்றிச் சிவந்து போகும். ஆனால் அவர்களிடம் ஏதும் பேசாமல் அவன் வழியே போய்விடுவான். சில சமயங்களில் அவன் பல நாட்கள் வீட்டுக்கே வர மாட்டான். வந்தாலும் தன்னைப் பெற்றெடுத்த தாயாரிடமும் பேச மாட்டான்.

ஆண்டுகள் சில கழிந்தன. ரஷீதும் ஹமீதும் சேர்ந்து கொஞ்சம் நிலத்தைக் குத்தகைக்கு எடுத்து அதில் விவசாயம் செய்யத் தொடங்கினர். இப்போது அவர்கள் வளர்ந்து வாலிபமாகி விட்டார்கள். இப்பொழுதெல்லாம் யாராவது வாய் தவறி அவர்களிடம் தாயாரைப் பற்றித் தவறாகப் பேசினால் செம்மையாக உதை கொடுப்பார்கள். குரல்வளையைப் பிடித்து நெருக்கி விடுவார்கள். வயலிலிருந்து வீட்டுக்கு வந்ததும், ''அம்மா, நாங்கள் வளர்ந்துவிட்டோம். உன்னை நாங்கள் கவனித்துக் கொள்வோம். நீ இனி மற்றவர்களுக்குச் சேவகம் செய்தது போதும்'' என்பார்கள். அவள் பேசாமலிருப்பாள். தொடர்ந்து அவர்கள் வற்புறுத்தினால், ''வாழ்நாள் முழுவதும் உழைத்து விட்டேன். இப்பொழுது எப்படிச் சும்மா இருக்க முடியும்? வேலை செய்யாவிட்டால் நான் செத்துப் போய்விடுவேன். உழைப்பு யாரையும் கொல்லாது. சோம்பேறிகளைத்தான் சாவு துரிதமாகப் பற்றும்'' என்பாள். கொஞ்ச நேரம் கழித்து, ''ரொம்ப நாளாக எனக்கு ஒரு ஆசை. எனக்கு ஒரு மருமகள் வேண்டும். என் பேரப் பிள்ளைகள் என் மடியில் தவழ வேண்டும். நான் ஒரு கிழவி என்றுதானே நீங்கள் நினைக்கிறீர்கள். வேலை செய்யாமல் ஒரு பாயில் படுத்து உமிழ்நீரைக் காரித் துப்பிக் கொண்டேயிருக்க வேண்டும். அப்படித்தானே?'' என்பாள்.

கடைசியாக இனியும் தன் பையன்களிடம் வாதிப்பதில் பயன் இல்லை என்பதை உணர்ந்த அந்தத் தாய் வயலில் போய் வேலை செய்வதை நிறுத்திக் கொண்டாள். அறுவடைக் காலங்களில் மட்டும் தன் அருமை மக்களுக்கு மோர் கொண்டு செல்வாள். மற்ற நேரங்களில் கிராமத்துப் பெண்களிடம் வம்பளப்பதிலேயே பொழுதைப் போக்கினாள். ஹமீதுக்குத் திருமணம் முடிந்ததும் இந்த வம்பளப்பையும் அவள் நிறுத்தி விட்டாள். வயலுக்கு மோர் கொண்டுசெல்லும் பணியை அவளது மருமகள் மேற்கொண்டாள். இவளோ பேரப் பிள்ளை பஷீரைக் கவனிப்பதில் தனது நேரத்தைச் செலவிட்டாள். பேரனுக்குத் தாலாட்டுவாள். பறவைகளைப் பற்றியும், மிருகங்களைப் பற்றியும் பல கதைகளைக் கூறுவாள். மடியில் போட்டுத் தூங்க வைப்பாள். அவன் தூங்கிய பின் பேரனுக்குக் காற்று வேண்டும் என்பதற்காக விசிறிக் கொண்டிருப்பாள். ஏதாவது செய்து கொண்டிருக்க வேண்டும் என்ற குறுகுறுப்புக் கொண்ட அந்தத் தாய்க்கு இப்பொழுது அவள் விருப்பத்துக்கு ஏற்ற நல்ல வேலை கிடைத்து விட்டது.

ஒரு நாள் காலை நேரத்தில் கிராமம் முழுவதும் பரபரப்பான தொரு சூழ்நிலை. சித்தப்பா ஜகதா கொலை செய்யப்பட்டுவிட்டான் என்ற செய்தியை மக்கள் பரப்பிய வண்ணமிருந்தனர். சந்தேகத்தின் பேரில் ஹமீதையும் ரஷீதையும் போலீஸ் தேடியது. ஜகதாவின் சடலம் அவர்களது கிணற்றுப் பக்கம் கிடந்தது. கொலை செய்வதற்குப் பயன்பட்ட அரிவாளும் அங்குதான் கிடந்தது. சகோதரர்கள் இருவரும் எங்கோ ஓடிப் போய் விட்டனர் என்றும் அவர்களது தாயார் விஷமருந்தித் தற்கொலை செய்து கொண்டாள் என்றும் மக்கள் கிசுகிசுத்தனர்.

தனது மாமியார் காலையில் வயலுக்கு மோர் கொண்டு சென்றவர் சீக்கிரமே திரும்பி விட்டாரென்றும், எதையோ பறிகொடுத்தது போன்றிருந்தார் என்றும் ஹமீதின் மனைவி கூறியதாகச் சிலர் பேசிக் கொண்டனர். ''என் கடைசிக் காலத்தில் இப்படி ஒரு கஷ்டம் எனக்கு வரவேண்டுமா? இனி நான் என்ன செய்வேன்?'' என்று அவள் சொன்னாளாம். திடீரென்று வெளியே போன அந்தத் தாய் தன் பேரனை எடுத்து முத்தமிட்டவாறே அழுதாளாம்.

''அம்மா, என்ன நடந்தது? நீங்கள் ஏன் அழுகிறீர்கள்?'' என்று மருமகள் கேட்டதும் கோவென்று அலறியவாறே தனது அறைக்கு ஓடிக் கதவைத் தாளிட்டுக் கொண்டாளாம். போலீஸ் வந்து கதவை உடைத்து அறையைத் திறந்தபோது அவள் குப்புறப் படுத்திருந்தாள். உயிரில்லாத உடம்பைத்தான் அவர்களால் காண முடிந்தது.

அன்று பகல் முழுதும் போலீஸ்காரர்கள் ஹமீதையும் ரஷீதையும் தேடினார்கள். எந்தத் துப்பும் கிடைக்கவில்லை. அன்று மாலை ரஷீத் தானாகவே சென்று போலீஸாரிடம் சரணடைந்தான். ஹமீத் தலைமறைவாகி விட்டான். போலீஸ் தீவிரப் புலன் விசாரணை மேற்கொண்டது. சாட்சியங்கள் தயாரிப்பதிலும், அறிக்கைகள் வாங்குவதிலும் ஈடுபட்டனர். ஜகதாவின் சடலம் பரிசோதனைக்கு அனுப்பப்பட்டது.

ஒரு வாரம் கழித்து மருத்துவப் பரிசோதனை அறிக்கை வந்தது. ரஷீத் நிரபராதி

---

## பஸ்ஸ்டாப்பில்

அவள்: ''என்னை முதன் முதலாகப் பார்த்த போது என்ன நினைத்தாய்...?''

அவன்: ''காலில் இருக்கிற என் பாட்டாவை!''

உ. ராஜாஜி



என்பதை அந்த அறிக்கை குல்தீபுக்குப் புலப்படுத்தியது. அறிக்கையின்படி ஜகதா காலை பதினொரு மணியிலிருந்து பன்னிரண்டு மணிக்குள் இறந்திருக்க வேண்டும். காலை பத்து மணியிலிருந்து ஒன்றரை மணிவரை ரஞ்சித் குல்தீப்புடன் இணைற்றருகே சதுரங்கம் ஆடிக் கொண்டிருந்தான். மெஹ்ரு மஸானி வந்து ஜகதாவின் கொலை பற்றிக் கூறியதும் பாதியிலேயே விளையாட்டை நிறுத்திவிட்டு ரஞ்சித் போலோ தோட்டத்திற்கு ஓடினான்.

சிறையில் பதிந்த ரஞ்சிதை குல்தீப் பல நடவைகள் போய்ப் பார்த்தான். மற்றவன் செய்த குற்றத்தைத் தன் தலையில் போட்டுக்கொள்ள வேண்டாம் என அவன் ரஞ்சிதை மன்றாடினான். கொலை நடந்த நேரத்தில் தாங்கள் விளையாடிக் கொண்டிருந்ததை நினைவுபடுத்தி ரஞ்சிதின் முட்டாள்தனத்தைக் கடிந்தான்;

ரஞ்சித் சிரித்தான். "உண்மை என்னவென்றால் மாற்று ஏற்பாடு செய்துவிட்டுத் தான் உன்னை வந்து பார்த்தேன். ஆனால் போலீஸ்காரர்கள் ஹமீதைத் தேடுகிறார்கள் என்று தெரிந்தபின்தான் என் மனத்தை மாற்றிக் கொண்டேன். ஹமீத் ஏன் கஷ்டப்பட வேண்டும்? எனவேதான் நான் கொலை செய்தேன் என ஒப்புக் கொண்டேன்" என்றான்.

"நீ என்னை ஒரு முட்டாள் என்று நினைக்கிறாய். அப்படித்தானே?" எனக் கேட்டான் குல்தீப். "என்னிடம் ஏன் பொய்சொல்கிறாய்? காலை பதினொரு மணியிலிருந்து பன்னிரண்டு மணிக்குள் கொலை நடந்ததாக டாக்டரின் அறிக்கை கூறுகிறது. நீயோ அதற்கு முன்னரே காரியத்தை முடித்து விட்டேன் என்று கூறுகிறாய்! அது எப்படி முடியும்?"

"டாக்டரின் அறிக்கையை மறந்துவிடு" என்றான் ரஞ்சித். "உயிரோடிருப்பவனைப் பற்றியே இந்த டாக்டர்கள் சரியாக எதுவும் சொல்ல மாட்டார்கள். செத்தவனைப் பற்றியா சரியாகச் சொல்லப் போகிறார்கள்? வெளுத்ததெல்லாம் பால் என்று நினைக்காதே."

"உன் தாயார் அன்று காலை பதினொரு மணிக்கெல்லாம் வயலுக்குச் சென்றதாக உன் அண்ணி கூறினாள்." என ஒரு நாள் குல்தீப் எதையும் யோசிக்காமல் ரஞ்சிதிடம் கூறிவிட்டான்.

ரஞ்சித் ஆத்திரமடைந்தான். "....இங்கிருந்து போய்விடு. உனக்கு உயிரின் மேல் ஆசை இருந்தால் என் முகத்தில் முழிக்காதே. ஓடிவிடு. இல்லையேல் ஜகதாவை அனுப்பிய அதே இடத்துக்கு உன்னையும் அனுப்பிவிடுவேன்" என்றான்.

புலன் விசாரணைகளை முடிப்பதற்குப் போலீசுக்கு அதிக நாள் பிடிக்கவில்லை. ரஞ்சித் குற்றத்தை ஒப்புக் கொண்டான். அதை ஊர்ஜிதப்படுத்தத் தங்களிடம் தயாராக வைத்திருந்த சாட்சியங்களைப் போலீஸார் சமர்ப்பித்தனர். "வயலுக்குச் செல்லுமுன் ரஞ்சித் தனது அரிவாளைத் தீட்டினான். வயலில் ஏதோ சலசலப்பு ஒலி கேட்டது. ஒரு பசுவோ அல்லது எருமையோ வயலுக்குள் வந்துவிட்டது என விரட்டுவதற்காக ரஞ்சித் ஓடினான். அங்கு சென்றதும் ஜகதா அவனது தாயாரிடம் பேசிக் கொண்டிருப்பதைக் கேட்டான். "நாளைக்கும் இதே சமயம் வா. நான் உனக்காகக் காத்திருப்பேன்" என ஜகதா ரஞ்சிதின் தாயாரிடம் கூறினான். ரஞ்சிதைப் பார்த்ததும் அவனது தாய் ரொட்டிக் கூடையையும் மோர்ப் பானையையும் அங்கேயே போட்டுவிட்டு ஓடிப்போய்விட்டாள். வெறி கொண்ட ரஞ்சித் ஜகதாவைக் கண்ட துண்டமாக வெட்டிச் சாய்த்தான்" எனப் போலீஸ் தரப்பில் கூறப்பட்டது.



"மந்திரிக்கு ஏன் இவ்வளவு போலீஸ் பந்தோபஸ்து?"
"அவரைத் தேர்ந்தெடுத்த வாக்காளர்களிடமிருந்து அவரைக் காப்பாற்றத்தான்!"
-ராமுசாமி

ரஞ்சித் அன்று காலையில் தனது அரிவாளைத் தீட்டிச் சென்றான் என பக்கிரியா என்ற ஆசாரி போலீஸ் தரப்புச் சாட்சியத்தை ஊர்ஜிதம் செய்தான். "பக்கிரியா, நன்றாகத் தீட்டு. ஒரு கத்திரிக்காயை, காரட்டு கிழங்கைச் சீவுவது போல் ஒரு மனிதனின் தலையைச் சீவவேண்டும். அந்த அளவுக்குக் கூர்மையாகத் தீட்டு" என அப்போது ரஞ்சித் கூறியதாகவும் அவன் சாட்சியமளித்தான்.

கிராமத் தலைவர் ஊர்ஜுனும் அன்று நகரத்திலிருந்து திரும்பும்போது கொலை நடந்த இடத்திலிருந்து குளத்தை நோக்கி ரஞ்சித் வேகமாகச் சென்று கொண்டிருந்ததைத் தான் பார்த்ததாகக் கூறினார்.

ஊர்ஜுனும் சிங் சம்பவம் நடந்த நேரத்தில் தான் இணைற்றருகில் காவல்காரன் டண்டாவிடம் பேசிக் கொண்டிருந்ததாகவும் அப்போது செங்கல் சூளையை நோக்கி ரஞ்சித் பைத்தியம் பிடித்தவன் போல் ஓடுவதைப் பார்த்ததாகவும் கூறினார். அப்போது ரஞ்சிதின் உடைகளில் ரத்தம் தோய்ந்திருந்ததாகவும் உடனே காவல்காரன் டண்டாவை அனுப்பிக் காவல் நிலையத்தில் புகார் தாக்கல் செய்யுமாறு கூறியதாகவும் வாக்குமூலமளித்தார். காவல்காரன் டண்டா இதை ஊர்ஜிதம் செய்தான்.

சாட்சியங்களில் பலவற்றைப் பதிவு செய்துகொண்ட மாஜிஸ்திரேட் ரஞ்சித் கொலைக் குற்றம் புரிந்திருப்பதற்கு ஆதாரம் இருப்பதாகக் கருதி, வழக்கை செஷன்ஸ் கோர்ட்டுக்குக் கமிட் செய்தார்.

நீதிமன்ற விசாரணையில் ரஞ்சித் எந்தவித அக்கறையும் செலுத்தவில்லை. தனக்காக எந்த வழக்கறிஞரையும் அமர்த்திக்கொள்ளவில்லை. குல்தீப் எவ்வளவோ கேட்டுக்

கொண்டும் கூட அவனுக்காக அரசாங்கம் நியமித்த வழக்கறிஞரிடம் வழக்கைப் பற்றி ரஷீத் எதையும் கூற மறுத்து விட்டான். தான் கொடுத்த வாக்குமூலத்தை மாற்றிச் சொல்லவோ அல்லது சம்பவம் நடந்த நேரத்தில் தான் வேறு இடத்தில் இருந்ததை நிரூபித்தோ தூக்கு மேடையிலிருந்து தப்பிக்க ரஷீத் மறுத்து விட்டான். உலகம் மாறலாம். இந்தக் குல்தீப் முகமது மாற மாட்டான். ''நான் கொலை செய்தேன். அதற்காக தூக்கிலிடப்பட வேண்டும். பொய் சொல்லி என் வாழ்க்கையைப் பாழாக்கவேண்டும் என ஏன் விரும்புகிறீர்கள்? தயவுசெய்து கடவுளுக்காக என்னை விட்டுவிடுங்கள். எனக்கு உதவி செய்ய முடியாவிட்டாலும் உபத்திரவம் செய்யாதீர்கள். என்னைப் பொய்யனாக்காதீர்கள். நல்லெண்ணத்தின் பேரால் மனச் சாட்சியின் பேரால் என் வேண்டுகோளுக்கு இணங்குங்கள். என் தலைவிதிப்படி நடக்கட்டும். என்னை விட்டுவிடுங்கள்'' எனச் சொன்னதையே திரும்பச் சொன்னான் ரஷீத்.

வழக்கை விசாரித்த செஷன்ஸ் நீதிபதி ரஷீதுக்குத் தூக்குத் தண்டனை விதித்தார்.

குல்தீபின் வேண்டுகோளையும் புறக்கணித்து ரஷீத் தனக்கு அளிக்கப்பட்ட தண்டனையை எதிர்த்து அப்பீல் செய்ய மறுத்து விட்டான். சில வாரங்கள் கழிந்தன. ரஷீதுக்கு விதிக்கப்பட்ட தூக்குத் தண்டனையை உயர் நீதிமன்றமும் ஊர்ஜிதம் செய்தது.

ரஷீதைக் கேட்காமலேயே குல்தீப் கவர்னருக்கு ஒரு கருணை மனு அனுப்பினான். ''தண்டிக்கப்பட்டுள்ள ரஷீத் இருபதே வயதே நிரம்பப்பெற்ற வாலிபன். கொலைக்காளான நபருக்கும் தனது தாயாருக்கும் இடையே இருந்த கள்ளத் தொடர்பைத் தாங்க முடியாத நிலையில்தான் அவன் இக்காரியத்தைச் செய்தான். அதோடு அவன் தாங்க முடியாத ஆத்திர மூட்டலுக்கு இரையான சூழலில் குறிப்பிடப்பட்டிருந்தது. கருணை மனுவை கவர்னர் நிராகரித்து விட்டார்.

ரஷீத் தூக்கிலிடப்படுவதற்கு நான்கு நாட்களுக்கு முன்னர் அவனது அண்ணன் ஹமீத் மீண்டும் கிராமத்துக்கு வந்தான். குல்தீபின் வற்புறுத்தலுக்கு இணங்க அவன் தூக்குத் தண்டனைக் கைதிகள் வதியும் தனிமைச் சிறைக்குச் சென்று ரஷீதைப் பார்க்கச் சம்மதித்தான். சிறை அதிகாரி இரண்டு நாட்கள் கழித்து வருமாறு கூறினார். நாளை மறுதினம் ரஷீத் தூக்கிலிடப்படுவான்.

இன்று சிறைக்கூடத்துக்கு இருவர் வந்தனர். சிறை அதிகாரிக்கு ஒரு மனுவை அனுப்பினர். சில நிமிடங்கள் கழித்ததும் சிறைச் சாலையின் இரும்புக் கதவுகள் திறக்கப்பட்டன. இருவரும் அலுவலக அறைக்கு அழைத்துச் செல்லப்பட்டனர்.

சங்கிலியுடன் கூடிய விலங்குகள் பிணைக்கப்பட்ட ரஷீதை இரண்டு காவலர்கள் அழைத்து வந்தனர். அவனது முகத்தில் துளிகூட பயமோ, கவலையோ காணப்படவில்லை. அண்ணனையும் தனது பால்ய நண்பனையும் பார்த்த ரஷீதின் முகம் மலர்ந்தது. சிரித்தான். அண்ணியைப் பற்றியும், குழந்தையின் நலத்தைப் பற்றியும் குசலம் விசாரித்தான். வயலில் பயிர் எவ்வாறிருக்கிறது எனக் கேட்டான். குனிந்த தலையை நிமிர்த்த முடியாத சோகம் கப்பிய நிலையில் ஹமீத் அவனது கேள்விக்குத் திக்கித் திணறிப் பதிலளித்தான்.

அந்த அறையில் சிறிது நேரம் மயான அமைதி நிலவியது. பேட்டி காணும் நேரம் முடிந்துவிட்டது என ஒரு காவலாளி கூறினான். ''ஏதாவது சொல்ல வேண்டுமானால் இப்பொழுதே சொல்லிக் கொள்ளுங்கள். மீண்டும் ஒரு சந்தர்ப்பம் கிடைக்காது'' என்றான்.

தனது இளவலின் கைகளைப் பிடித்த வண்ணமே உரத்த குரலில் ''ரஷீத்! உடன் பிறப்புக்காக நீ செய்துள்ள தியாகம் உலக வரலாற்றிலேயே காணக் கிடைக்காது. உனக்கு நான் என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்'' என்றான் ஹமீத்.

சிரித்தவாறே, ''நான் என்ன செய்து விட்டேன்? ஒன்றுமேயில்லை'' என்றான் ரஷீத்.

ஹமீதின் கண்கள் குளமாயின. ''வாழ்க்கையின் வசந்தங்களைக் காண வேண்டிய நீ, எதையுமே அனுபவிக்காமல் நான் செய்த குற்றத்தைத் தன் தலையில் போட்டுக்கொண்டாய்.''

''பரவாயில்லை ஹமீத். உன் மகன், பஷீரை ஒரு மனிதனாக வளர்த்தெடு. ஒருவேளை உன்னவள் தவறு நேர்ந்தால் அதற்குக் காரணமானவனை அவன் கொலை செய்யட்டும். அதைப் பார்த்து உன் மனைவி தற்கொலை செய்துகொள்ளட்டும்'' என்று ரஷீத் கூறப் பேட்டி முடிந்தது.

கொசுக்களை ஒழிக்க பாக்டீரியா வளர்க்கிறார் டாக்டர் சாமுவேல் ஸிங்கர். ஒரு குளம் குட்டையில் இந்த பாக்டீரியா அடங்கிய திரவம் ஒரு கோப்பை கலந்தால் போதும் கொசுக்கள் குளோஸ்! மலேரியா தலை காட்டாது. இந்தக் கிருமிகளால் மனிதனுக்கோ மிருகங்களுக்கோ எந்தவித ஆபத்தும் இல்லை என்கிறார் இந்த அமெரிக்கர்.






● உலகின் சிரிப்புக்கள் மலர்வதற்கு ஊற்றும் தண்ணீரே அதன் கண்ணீர்.

● கதிரவன் மறைந்து விட்டானே என்று நீ கண்ணீர் வடித்தாயானால் (இப்போது வந்துள்ள) தாரா கணங்களையும் பார்க்காமல் இழக்கிறாய்.

● ''ஓ கடலே! உன்னுடைய மொழி என்ன?''
''நிரந்தர வினாவே என் மொழி.''
''ஓ வானமே! உன்னுடைய விடையின் மொழி என்ன?''
''நிரந்தர மௌனத்தின் மொழிதான்.''

● நீ உண்மையில் எதுவோ அதைக் காண்கிறாயில்லை, நீ எதைக் காண்கிறாயோ அது உன் நிழலே.

● என் பிரபுவே! உன் கீதங்களைக் கிழித்துக் கொண்டு உச்சவிடும் முட்டாள்களாக என் ஆசைகள் உள்ளன.

வெறுமே கேட்டுக் கொண்டிருப்பவனாக என்னைச் செய்வேன்!

● நான் இருக்கிறேன் என்பது ஒரு சாச்வத ஆச்சரியம், அதுவே வாழ்க்கை.

● ''சலசலக்கும் இலைகளான நாங்கள் புயலுக்குப் பதில் கொடுக்கக் குரல் படைத்திருக்கிறோம். அது சரி, இத்தனை மௌனமாயிருக்கும் நீ யார்?''
''நான் வெறும் பூ.''

● உழைப்போடேயே சேர்ந்தது ஓய்வு—கண்களோடு இமை போல.

● மனிதனின் பிறவி இயல்பு என்றுமே குழந்தையாக இருப்பதே. அவனுடைய ஆற்றல் என்றும் வளர்ந்து கொண்டிருப்பதிலேயே உள்ளது.

● அழகே! உன்னைக் கண்ணாடியில் கண்டு கொள்ளாதே; அது ஏமாற்றுத் தோத்திரம் தான். அன்பிலேயே உன்னைக் கண்டுகொள்.

● அவனுக்குச் சொந்தமான காலைப் பொழுதுகளே அன்றன்றும் ஆண்டவனுக்குப் புது ஆச்சரியங்களாகின்றன.

● வாழ்க்கை உலகியல் உரிமைகளால் செல்வத்தைப் பெறுகிறது; அன்பின் உரிமைகளால் மதிப்பைப் பெறுகிறது.

● நீரில் உள்ள மீன் மௌனமாயிருக்கிறது, நிலத்தில் உள்ள விலங்கு சத்தம் போடுகிறது. வானில் உள்ள பக்ஷி பாடுகிறது. மனிதனிடம் கடலின் மௌனமும், நிலத்தின் சத்தமும், வானின் சங்கீதமும் இருக்கின்றன.

● தன்னுடைய போர்க் கருவிகளையே தெய்வமாகக் கொண்டிருப்பவன் அக்கருவிகள் என்று வெற்றி பெறுகின்றனவோ, அன்று அவனேதான் தோல்வி பெற்றவனாகிறான்.

● படைப்பின் மூலம் பகவான் தன்னையே தெரிந்து கொள்கிறான்.

● அகல் விளக்கு தன்னை ஒன்றுவிட்ட சகோதரி என்று அழைக்கவாவது என்று அதைக் கண்ணாடித் தீபம் இட்டுகிறது. சந்திரன் உதிக்கிறது. கண்ணாடித் தீபம் மதுரமாகச் சிரித்து மதியத்தை, ''என் அன்பு அக்காளே, சொந்த அக்காளே'' என்று அழைக்கிறது.

● நசிக்கும் நொடிகளிடம் பயப்படாதே—இப்படி இசைக்கிறது நிரந்தரத்தின் குரல்.

● அபூர்ணத்திடம் உள்ள அன்புக்காகவே பூர்ணம் தன்னை அழகில் அலங்கரித்துக் கொள்கிறது.

● ஈசன் மானுடனிடம் சொல்கிறான்: ''நான் உன்னை ஸ்வஸ்தப்படுத்துகிறேன். அதனாலேயே உன்னைக் காயப்படுத்துகிறேன். உன்னை நேசிக்கிறேன், அதனாலேயே தண்டிக்கிறேன்.''

● தீபக் கொழுந்துக்கு நன்றி சொல். அது தரும் ஒளிக்காக — ஆனால் மறந்து விடாதே அதைத் தாங்கிக் கொண்டு நிழலிலே பொறுமையின் உறுதியோடு நிற்கிற தீபத் தண்டினை.

● பகவான் மஹா ஸாம்ராஜ்யங்களில் அலுப்படைகிறான். சின்னஞ் சிறு மலர்களில் அவன் ஒருபோதும் அலுப்புக் கொள்வதில்லை.

● உலகை நாம் தவறாகப் புரிந்துகொண்டு அது நம்மை ஏமாற்றுகிறது என்கிறோம்.

● ஆண்டவன் இன்னமும் மனிதனிடம் நம்பிக்கை இழக்கவில்லை என்ற ஸ்ரீமுகத்தைப் பிறக்கும் குழந்தை ஒவ்வொன்றும் கொண்டு வருகிறது.

● சாவிலே பல ஒன்றாகின்றன; வாழ்விலே ஒன்று பலவாகிறது. சமயம் ஒன்றே ஆகும்—ஆண்டவன் சாகிறபோது.....

தமிழ் வடிவம்: ரா. கணபதி



# இதயம் திறந்து பேசும் இளம் வாக்காளர்கள்-II

✖ இடமிருந்து வலம்: கண்ணன், சுந்தர், லதா, சுபத்ரா, கோவிந்தன்.

[சட்டசபைத் தேர்தலில் முதன் முதலாக வாக்களிக்கும் தகுதி பெற்ற ஐந்து இளம் வாக்காளர்கள் உரையாடுகிறார்கள்.]

உரையாடலில் பங்கு பெறுவோர்:

1. திரு கண்ணன் 2. திரு சுந்தர் 3. குமாரி லதா 4. குமாரி சுபத்ரா 5. திரு கோவிந்தன்]

கோவிந்தன்: தேர்தலில் எந்தக் கூட்டணி வெற்றி பெறும் என்ற கேள்வி ஒருபுறமிருக்க இந்தத் தேர்தல் அவசியம்தானா என்று விவாதிப்பது அவசியமாகிறது.

கண்ணன்: யெஸ்.. நீங்க சொல்றது சரிதான்.. அ.தி.மு.க. ஆட்சிக்கு வந்து இரண்டரை ஆண்டுகள்தான் ஆகின்றன. பெரும்பான்மை பலத்துடன்தான் ஆண்டுகொண்டிருந்தது. அப்படிப்பட்ட அரசை எக்காரணத்தையும் கூறாமல் மத்திய அரசு திடீரென்று கலைத்தது அடிப்படை ஜனநாயக மரபுகளைக் குழி தோண்டிப் புதைத்ததற்கு ஒப்பானதாகும்.

சுபத்ரா: முன்பு தி. மு. க. அரசும் இது மாதிரிதானே கலைக்கப்பட்டது!

கண்ணன்: லஞ்சம், ஊழல் என்ற குற்றச்சாட்டுகள் அடிப்படையில் அவ்வரசின் மேல் விசாரணைக் கமிஷன் நியமிக்கப்பட்டதால் அப்போது அவ்வரசைக் கலைத்தது சரிதான் என்று எடுத்துக் கொள்ளலாம். தற்போது காரணமே இல்லையே!

லதா: ஜனநாயக மரபுகளுக்கு வக்காலத்து வாங்கிக் கொண்டு வந்த ஜனதா கட்சியே இம்மாதிரி பெரும்பான்மை பலம் கொண்டு ஆட்சி செய்த சட்டசபைகளைக் கலைத்து வழி காட்டியது. தற்போது இந்திரா காந்தி பின்பற்றியுள்ளார்.

கோவிந்தன்: ஐந்து வருட பதவிக் காலம் ராஷ்டிரபதி உத்தரவால் மேலும் நீடிக்கப்பட்டிருந்த சமயத்தில்தானே ஜனதா அவ்வாறு செய்தது! மேலும் மக்கள் நெருக்கடி நிலைமை பிரகடனத்தையும் சர்வாதிகாரத்தையும் நிராகரித்திருந்த கால கட்டம் அது. அன்றைய சூழ்நிலைக்கும் இன்றைய சூழலுக்கும் ரொம்ப வித்தியாசம் உண்டு.

சுபத்ரா: தற்போது அ.தி.மு.க. அரசை மத்தியஅரசு கலைத்தது தமிழகத்தில் அ.தி. மு. க. ஆட்சியில் சீர்கெட்டு வந்த சட்டம் ஒழுங்குப் பிரச்னைதான் காரணம் என்று எனக்குத் தோன்றுகிறது.

கண்ணன்: நல்ல வேடிக்கையான வாதம் இது! வேறு பல மாநிலங்களுடன் ஒப்பிடும் போது தமிழகத்துச் சட்டம் ஒழுங்குப் பிரச்னை எவ்வளவோ தேவலாம்.

சுபத்ரா: இருக்கலாம்... ஆனால் தி.மு.க. ஆட்சிக் காலத்தில் இருந்ததை விட அ.தி. மு.க. ஆட்சி காலத்தில் சட்டமும் ஒழுங்கும் மிகவும் க்ஷீணமாகி இருந்ததை எவராலும் மறுக்க முடியாது.

கோவிந்தன்: இதற்குக் காரணம் ஏதாவது பிரச்னையையும் குழப்பத்தையும் தோற்றுவித்துக் கொண்டே இருந்த தி.மு.க.வின் போக்கும், அ.தி.மு.க. ஆட்சியாளர்களுக்கு போலீஸ் மற்றும் மற்ற நிர்வாகத் துறை இலாக்காக்களின் முழுமையான ஒத்துழைப்பும் கிடைக்காததும்தான்.

சுபத்ரா: ஆட்சி என்றால் எதிர்க் கட்சிகள் ஏதாவது பிரச்னைகளைத் தோற்றுவித்துக் கொண்டுதான் இருக்கும். அதைச் சமாளிப்பதில்தான் ஆளும் கட்சியின் திறமை இருக்கிறது.

லதா: போலீஸ், நிர்வாகத் துறை இலாக்காக்களின் நம்பிக்கையையும், முழு ஒத்துழைப்பையும் பெற அ.தி.மு.க. அரசு தவறிவிட்டது என்பதை அதன் திறமையின்மைக்குச் சான்று ஆகிறதே!

கண்ணன்: எத்தனை தடங்கல்கள் இருந்தாலும் எம். ஜி. ஆர். அவற்றைச் சமாளிக்காமல் விடவில்லையே! மாணவர்கள், ஆசிரியர்கள், பஸ் தொழிலாளர்கள், விவசாயிகள், டாக்டர்கள் என்று பலவித வகுப்பினரின் போராட்டங்கள் அவரது ஆட்சிக் காலத்தில் தோன்றத்தான் செய்தன. அவற்றை மிகவும் சாமர்த்தியமாகச் சமாளித்தாரே!

சுபத்ரா: சமாளித்தார், அவ்வளவுதான். பிரச்னைகளுக்குத் தீர்வு காண்பது என்பது வேறு. தள்ளிப் போட்டு தாற்காலிகமாகத் தப்பித்துக் கொள்வது என்பது வேறு. கருணாநிதி பிரச்னைகளுக்கு உடனடியாகத் தீர்வு காண்பதில் வல்லவர்.

கோவிந்தன்: திரு எம். ஜி. ஆர். ஆட்சிக்குப் புதியவர். முன் அனுபவம் இல்லாதவர். அதனால் சற்று நிதானமாகச் செயல்பட்டிருக்கலாம். ஆனால் இரண்டரை ஆண்டு கால ஆட்சியில் அவர் நிர்வாகத்தின் நெளிவு சுளிவுகளைக் கற்றுத் தேர்ந்துள்ளார். அடிப்படையில் மிகவும் நல்லவர். மக்களுக்கு நன்மைகள் செய்ய வேண்டும் என்பதில் ஆழ்ந்த பற்று உள்ளவர்.

சுபத்ரா: எம். ஜி. ஆர். நல்லவர் என்று ஒப்புக் கொள்கிறேன். அவர் ஒரு நல்ல முதலமைச்சரா என்பதுதான் கேள்வி. ஒரு முதலமைச்சர் மக்களுக்கு நல்லன செய்ய வேண்டும் என்று விரும்பினாலும், திறமை இருந்தால்தானே நினைத்ததை முடிக்க முடியும்? இல்லாவிடின் நல்லவர் என்பதால் யாருக்குப் பிரயோசனம்? அவரிடம் திறமையும் இல்லை; கொள்கைகளில் உறுதியும் இல்லை.

சுந்தர்: மதுவிலக்குக் கொள்கையிலும், பிற்பட்ட வகுப்பினராயினும் வருவாய் அடிப்படையிலேயே சலுகைகள் என்ற கொள்கையிலும் எம். ஜி. ஆர். அடித்த பல்டிகள் இதற்குச் சான்று!

கோவிந்தன்: பல்டி அடிப்பது என்பது வேறு. யதார்த்தமான அணுகுமுறை என்பது வேறு. இந்த விஷயத்தில்தான் எம்.ஜி. ஆர். மற்ற அரசியல்வாதிகளினின்றும் தனித்து நிற்கிறார். எடுத்த முடிவுகள் தவறு என்றால் அவற்றை மாற்றிக்கொள்வதை 'பல்டி' என்று எப்படிக் கூற முடியும்?

டெக்சாஸைச் சேர்ந்த லேலா ஜீனோரஸ் என்ற பெண்மணி முழுவதும் திராக்ஷை பழத்தாலேயே தயாரிக்கப்பட்ட ஆடையை அணிந்தார். அதன் கனம் 64 பவுண்டு. —குயிலி ராஜேஸ்வரி



சுபத்ரா: ஆட்சிப் பொறுப்பில் இருப்பவர் ஏதோ ஒரு தவறு செய்து பிறகு மாற்றிக் கொள்ளலாம். சங்கிலித் தொடர் போல் நேற்று ஒன்று சொல்லி, இன்று அதை மாற்றிக் கொண்டிருந்தால் அந்தப் போக்கை சர்க்கஸ் கோமாளியின் பல்டிகளுக்குத்தான் ஒப்பிட முடியும்.

கண்ணன்: வரப்போகும் சட்ட சபைத் தேர்தலைப் பற்றிக் கவனிப்போம்... அ.தி.மு.க. கூட்டணியைப் பொறுத்த மட்டில் அ.தி.மு.க.வே சுமார் 170 இடங்களுக்கும் மேலாகப் போட்டி விடுகிறது. அக் கூட்டணி வெற்றி பெற்றால் அ.தி.மு.க. தனிக் கட்சியாக ஸ்திரமான ஆட்சி அமைக்கும்... தி.மு.க. கூட்டணி வெற்றி பெற்றால் கூட்டணி ஆட்சிதான் ஏற்படும் என்பது சந்தேகத்துக்கு இடமில்லாமல் ஆகிவிட்டது. பல மாநிலங்களில் கூட்டணி ஆட்சி எந்த லட்சணத்தில் செயல்பட்டிருக்கிறது என்பதை நாடறியும்.

சுபத்ரா: பாண்டிச்சேரியில் இ. காங்கிரஸும் தி.மு.க.வும் சிறப்பாகவே ஆட்சி புரிகின்றன. தமிழகத்திலும் இந்நிலை தொடர்வதில் எவ்வித இடையூறும் இருப்பதாகத் தெரியவில்லை. மத்தியில் ஆட்சியில் உள்ள கட்சி மாநிலக் கூட்டணியில் இருப்பதால் மாநிலத்தின் வளர்ச்சிக்கு மிகவும் உதவியாக இருக்கும்....

கோவிந்தன்: இந்திரா காங்கிரஸும் தி.மு.க.வும் நீண்ட நாட்கள் இணைந்து செயலாற்றும் என்பதில் எனக்கு நம்பிக்கை இல்லை. இக்கட்சிகளுக்கிடையே சிறு மோதல் வந்தாலும் ஆட்சி கவிழ்ந்து இன்னொரு தேர்தல் வரும். அ.தி.மு.க. ஆட்சிக்கு வந்தாலும் மத்திய அரசுடன் ஒத்துழைக்கும் என்று எம். ஜி. ஆர். கூறியுள்ளார். அந்நிலையில் ஐந்தாண்டுகளுக்கு நிலையான அரசு தமிழகத்தில் நீடிக்கும்.

கண்ணன்: இந்தி திணிப்பு எதிர்ப்பு; மாநில சுயாட்சி போன்ற தி.மு.க.வின் கொள்கைகள் கூட்டணி ஆட்சியில் என்ன வாகும்? கொள்கைகளை விட்டுக் கொடுக்காமல் போராடினால் ஆட்சி கவிழும். இல்லாவிடில் கலைஞர் இந்திராவுக்கு அடிபணிந்து கொள்கைகளைக் காற்றில் பறக்க விட வேண்டியதுதான்!

சுபத்ரா: இதற்கு மறுபுறமாகத் தமிழகத்தின் நிலையான நல்லாட்சி ஏற்பட கலைஞருடன் ஒத்துழைத்து இந்திரா தமது கொள்கைகளை ஓரளவு விட்டுக் கொடுப்பார் என்று ஏன் நம்பக் கூடாது? ஒரு பெரிய நன்மை கருதி இரு தரப்பினரும் அதைவிடச் சிறிய விஷயங்களில் சமரசம் செய்து கொள்வதுதான் நல்லது.

கண்ணன்: நல்லதுதான். ஆனால் அப்படி நடக்குமா என்பதுதான் கேள்வி. தேர்தல் முடிவு எப்படியானாலும் இந்த விவாதம் சுவாரஸ்யமாய் இருந்தது!

[அவரவரும் தத்தமது அபிப்பிராயங்களில் உறுதியாக இருந்து விடைபெற்றுப் பிரிகின்றனர்.]

உரையாடல் தொகுப்பு: **நாயகன்**
புகைப்படம்: **மன்னை மூர்த்தி**

## சிறிய அளவு படம் ஸ்டாக் தீர்ந்து விட்டது!
## பெரிய அளவு படம் மட்டும் கொஞ்சம்தான் கைவசமுள்ளது.

தாமதியாதீர்கள்! இன்றே கீழ்க்கண்ட முகவரிக்குப் படத்தின் கிரயத்துடன் பதிவுத் தபால் செலவும் சேர்த்து முன்னதாக மணியார்டர் செய்யவும்.



அகில உலகப் புகழ் பெற்ற

**ஸ்ரீ ஜயஹனுமான்** வண்ணப்படம்

( Copyright regd. A. 20286/78 )

**ஜகத்குரு ஸ்ரீ காஞ்சிப் பெரியவர்களால்**

மகத்தான அருளாசிகள் வழங்கப் பெற்ற
அற்புத சக்தி வாய்ந்த படம்

**கல்கி ஓவியர் வினு வரைந்தது**

ஆதாரம்: **சேங்காலிபுரம் ஸ்ரீ அனந்தராம தீட்சிதரின் ஜயமங்களத் தோத்திரம்**

**பூஜை முறைப் புத்தகம் படத்துடன் இனாமாகத்** தரப்படுகிறது.

**பக்தியுடன் 45 நாட்கள் பூஜித்தால் நினைத்த காரியம் நிறைவேறுகிறது. ஜாதி மத வேறுபாடின்றி ஆண், பெண் யார் வேண்டுமானாலும் பூஜிக்கலாம். இப்படத்திற்கென்று தனியாக விரதமோ, கட்டுப்பாடோ கிடையாது. எல்லா சுவாமிக்கும் அநுசரிக்கும் ஆசாரம் போதுமானது. இப்படம் வீட்டிலிருந்தாலே பல நன்மைகள் உண்டாகும்.**

பல்லாயிரக்கணக்கான அன்பர்கள் பூஜித்து பலனடைந்து மெய் சிலிர்க்கும் கடிதங்கள் எழுதியுள்ளனர். அதில் ஒரே ஒரு கடிதத்தை கீழே படியுங்கள்.

**"நிறைய பேர் வாங்குகிறார். காரியமும் சித்தி ஆகிறது. எறக்குறைய ஒரு வீட்டில் 30 வயது பெண் கல்யாணத்திற்கு இருந்தாள். இந்த போட்டோவை அவள் அக்காள் பூஜை செய்து கல்யாணம் நடைபெற்றுள்ளது."**

**தோ, ஜம்ஷெட்பூர்**



**ஸ்ரீ ஜயஹனுமான்** படம்

கைவசமிருக்கும் ஒரே அளவு 13½ × 20" ரூ. 5-00
(பூஜைப் புத்தகத்துடன்)

**ஓவியர் வினு வரைந்தது**

## ஸ்ரீ காஞ்சிப் பெரியவர்கள்

படம் இரண்டு அளவுகளில் கிடைக்கும்
13½ × 20" ரூ. 5-00 9½ × 15" ரூ. 3-00

பாகிங் உட்பட பதிவுத் தபால் செலவு ரூ.4/- கூடுதல் இரண்டு படங்களின் எடை வரை வி. பி. பி. இல்லை. 50 படங்களுக்கு 20% தள்ளுபடி உண்டு.
நேரிலும் கிடைக்கும்.

உரிமையாளர்: **ஸ்ரீமதி சரஸ்வதி வெங்கட்ராமன்**
**w/o வினு (கல்கி) தெய்வ படம் வெளியிடுவோர்**
**16, வேலாயுத முதலித் தெரு, நுங்கம்பாக்கம்,**
**சென்னை - 600 034** போன்: 89191
(வள்ளுவர் கோட்டம் பஸ் ஸ்டாப் அருகில்)



# கடல் ராணி

### சாண்டில்யன்

## அத்தியாயம் 43

## ஓவியம், காவியம், நாடகம், தத்துவம்

சிந்து துர்க்கத்தின் துறையைப் படகு அடைந்ததும் அனந்த் படகிலிருந்து கருங்கல் படியில் குதித்துப் படகுக் கயிற்றை எடுத்து அங்கிருந்த இரும்புத் தளை ஒன்றில் படகைப் பிணைத்தான். பிறகு படகிலிருந்து சித்தினிகள் இருவரையும் கைலாகு கொடுத்து ஒவ்வொருவராகத் தரையில் இறக்கினான். ஆம்பலும், அம்புஜமும் போல இருவித அழகுள்ள அந்த இரு பெண்களையும் தரையில் இறக்கியதும், ''நமது கோட்டைக்கு வந்து விட்டோம். இனி இந்தக் கோட்டையை இரண்டு ராணிகளும் ஆளலாம்'' என்று கூறி இருவரையும் நோக்கிப் புன்முறுவல் செய்து கோட்டையை வலது கையை எழுப்பிக் காட்டவும் செய்தான் அனந்த்.

அவன் சொற்களை இரண்டு ராணிகளுமே ரசித்ததாகத் தெரியவில்லை. அந்திவேளையாதலால் அலைகடல் தாமரையான ரத்னாவின் அம்புஜ வதனம் குவிந்தது திடீரென்று. அவள் கண்களில் சீற்றம் தெரிந்தது. அந்தி வேளையாதலால் மலர்ந்திருந்த சாருவின் அல்லி வதனம் கூட இயற்கைக்கு விரோதமாகச் சரேலெனக் கூம்பியது. கண்கள் அனந்தைச் சுட்டு விடுவன போல் பார்த்தன. அவர்கள் படகு தூரத்தில் வரும்போதே பார்த்த சிந்து துர்க்க மாலுமிகள் சிலர் படகுத் துறையை அடைந்திருந்ததால், அந்த இரு மாதர்களின் முகக் கடுப்பையும், அனந்த் அவர்களைச் சமாளிக்க வெளியிட்ட அசட்டுப் புன்முறுவலையும் காணவே செய்தனர். இருந்தாலும் அவர்களுக்கிடையே புகுவதோ, வரவேற்பதோ உசிதமில்லை யென்பதைப்புரிந்து கொண்டதன் விளைவாக, படகிலிருந்து சாருவின் சிறு துணி மூட்டையைக் கூட எடுக்க யாரும் முன்வரவில்லையாதலால் அந்தப் பணியை அனந்தே செய்தான். அவன் குனிந்து படகிலிருந்த மூட்டையை எடுத்ததும், கடல் ராணி இகழ்ச்சிப் புன்முறுவல் செய்து ''வீரருக்கு மூட்டை தூக்கும் பழக்கம் நெடு நாளாக உண்டுபோலிருக்கிறது'' என்று கூறினாள்.

இதைக் கேட்டதும் சாரு நகைக்கவே, ''என்ன நகைக்கிறாய்?''என்று ராணிசீறினாள்.

''பெண்ணைத் தூக்குவதை விடச் சிறு மூட்டையைத் தூக்குவது தவறாகிவிடுமா?'' என்று கேட்டாள் சாரு.

''எந்தப் பெண்ணைத் தூக்கினார்?'' என்று கேட்டு ஒரு அடி சாருவை நோக்கி எடுத்து வைத்தாள் ராணி.

''அதை விளக்க அவசியமில்லை'' என்றாள் சாரு.

''ஏனோ?'' ராணியின் கேள்வியில் அனல் வீசியது.

''பெண்ணைத் தூக்கியதாகச் சொன்னதும் எனக்கா கோபம் வந்தது?'' என்று கூறிய சாரு நகைத்தாள்.

''என்னை அவர் தூக்கவில்லை'' என்றாள் ராணி கோபம் சிறிதும் தணியாமல்.

''சரி தள்ளினார்'' என்றாள் சாரு.

''யார் சொன்னது?'' ராணியின் கோபம் கரை கடந்து கொண்டிருந்தது.

''நீதானே சொன்னாய் வரும்போது.''

''அதுவா?''

''ஆம்.''

''அது ஸித்தியின் கொலைகாரனிடமிருந்து என்னைக் காக்க. வேறு வழியில்லை.''

''வேறு வழி இருந்தாலும் அதைச் செய் திருக்க மாட்டார்.''

''சாரு!''

''ராணி!''

''இந்தக் கோட்டையில் என் ஆணை ஒன்று தான் செல்லும்.''

''சென்றால் என்ன செய்வாய்?''

''உன்னைச் சிறை செய்வேன்.''

''முடியுமானால் பார்.''

இந்த உரையாடல்களில் இரு பெண்களும் ஒருவரை யொருவர் நெருங்க முயலவே அனந்த் இடையில் புகுந்து ''அட சனியன்களா! எல்லாரும் பார்க்கிறார்கள். சும்மா இருங்கள்'' என்று இருவரையும் ஒருவரை யொருவர் நெருங்க விடாமல் தடுத்து இருவர் இடைகளிலும் இரு கைகளைக் கொடுத்து இறுக்கி அணைத்துக் கொண்டான்.

இந்தச் சச்சரவின் ஆரம்பத்திலேயே அவர்களைத் தூரத்திலிருந்து கவனித்துவிட்ட துலாஜி கோட்டைத் தளத்திலிருந்து இறங்கி ஓடிவந்தான் அவர்கள் இருந்த இடத்துக்கு. அனந்தின் கடைசி நிலைமையைப் பார்த்ததும் ''கிருஷ்ண பரமாத்மா! வரவேண்டும் வர வேண்டும்'' என்று அனந்தைப் பார்த்து நகைத்தான்.

''என்ன மண்ணாங்கட்டி பரமாத்மா? பிராணன் போகிறது இவர்களுடன் மன்றாட'' என்றான் அனந்த் சலிப்புடன்.

''கிருஷ்ண பரமாத்மாவை அப்படிச் சொல்லக் கூடாது. மகா பாவம். இந்த மாதிரி இரண்டு பெண்களின் இடையைச் சுற்றிய கைகளுடன்தான் அவரை ஓவியத்தில் தீட்டுகிறார்கள்'' என்றான் துலாஜி.

''ஓவியத்தில் அப்படி'' என்றாள் சாரு துலாஜியைப் பார்த்து.

''வேறு எதில் எப்படி?'' என்று துலாஜி கேட்டான்.

''காவியத்தில் இன்னொருத்தி உண்டு. அவள் தனித்திருப்பவள் கிருஷ்ணனுடன்.''

''அவள் யார்?''

''ராதை.''

''ஐயோ! மூன்றாவதா!'' இதைக் கேட்ட துலாஜி பரிதாபத்துடன் பார்த்தான் அனந்தை. ''இந்திரஜித்!'' என்று



மெள்ள அழைக்கவும் செய்தான் அனுதாபத்துடன்.

''இந்திரஜித்தா? இந்திரனை ஜெயிப்பது இத்தனை கஷ்டமில்லை. நான் இந்திரஜித்தாக மாறுவதைத் தவிர வேறு வழியில்லை'' என்ற இந்திரஜித் அனந்த் ''இந்த இரண்டு சனியன்களையும் எங்காவது கொண்டு தொலை'' என்று துலாஜியை நோக்கிக் கூறிவிட்டு, இருவர் இடைகளிலிருந்த தனது கைகளையும் நீக்கிக் கொண்டு, வலது கையால் தனது கச்சையிலிருந்த ஒரு கடிதத்தைச் சுருட்டி துலாஜியின் கையில் திணித்துவிட்டு, கோட்டைக்குள் வெகு வேகமாகச் சென்றுவிட்டான். கடிதத்தைக் கச்சையில் துரிதமாகப் பத்திரப்படுத்திக் கொண்ட துலாஜி இரு பெண்களையும் நோக்கி, ''ராணிகள் இருவரும் என்னுடன் வரலாம்'' என்று துவங்கினான்.



பாக்தாத்தின் காலீஃப் திரு மாமூன் திருமணம் செய்து கொண்டார். அந்த வைபவம் 48 மணி நேரம் நீடித்தது. அந்த நேரம் பூராவும் விருந்தினர்கள் மேல் விதானத்திலிருந்து நுண்ணிய துளைகள்மூலம் முத்துக்களைப் பொழிந்தார்களாம். இதன் மதிப்பு அன்றைக்கு 2கோடி டாலர்களாம். —ஜூபிலி ராஜேஸ்வரி

அடுத்த விநாடி அந்த இருவரும் அவனை நோக்கி வந்த வேகத்தில் துலாஜி விலகிவிடவே இரண்டு கட்டழகிகளும் கோட்டை வாயிலைத் தாண்டி அனந்தைத் தொடர்ந்து விரைந்தனர். இருவர் பின்னும் வந்ததைக் கவனிக்காமலும், சிறிதும் அக்கம் பக்கம் தலையை அசைக்காமலும், பார்வையைத் திருப்பாமலும், தளபதி மாளிகையை அடைந்ததும், தளத்தை விட்டு இறங்கி அவனுக்காகக் காத்திருந்த சங்கர் பந்த் அவனை வரவேற்றார். அவர் ஏதோ கேட்கத் துவங்கு முன்பாகவே அந்த மாளிகையை அடைந்துவிட்ட இரு பெண்களும் துரிதமாக உட்புகவே தளபதி தேள் கொட்டியவர் போல் துள்ளிக் குதித்துப் பக்கவாட்டில் நகர்ந்து வழி விட்டார். அவர்கள் உள்ளே சென்றதும் காரணமில்லாமல் நகைத்தார்.

''என்னைப் பார்த்தால் சிரிப்பாக இருக்கிறது உங்களுக்கு?'' என்று கேட்டான் அனந்த் தளபதியை நோக்கிச் சினத்துடன்.

''சே, சே! அப்படி ஒன்றுமில்லை'' என்ற தளபதி அனந்தின் கையிலிருந்த மூட்டையைக் கண்டதும் வாயைப் பொத்திக் கொண்டார், மேலும் வந்த சிரிப்பை அடக்க.

அனந்த் அவரை முறைத்துப் பார்த்தான். ''இதுவா?'' என்று ஏதோ சொல்ல முற்பட்டு நிறுத்தினான்.

வாயைப் பொத்திய கையை நீக்கிவிட்டு, ''இது?'' என்று கேட்டார் தளபதி.

''சாரு கொண்டு வந்தாள்'' என்றான் அனந்த்.

''நல்லது.''

''எது நல்லது?''

''மூட்டை கொண்டு வந்தது.''

''அவள் துணிகள் இதில் இருக்கின்றன.''

''நல்லது.''

''என்ன நல்லது?''

''துணி இருப்பது.''

''துணி இருப்பதில் என்ன நல்லது?''

''பெண்களுக்குத் துணி இருப்பது நல்லது. இல்லையென்றால் அநாவசிய சர்ச்சை அடிக்கடி கிளம்புகிறது.''

''என்ன உளறுகிறீர்?''

''நான் உளறவில்லை.''

''வேறு யார் உளறுகிறார்கள்?''

''காவியகர்த்தாக்கள்.''

இதைக் கேட்ட அனந்த் பெரிய சங்கடத்துக்குள்ளானான். ''காவியம் நிரம்பப் படித்திருக்கிறீர் போலிருக்கிறது?'' என்றும் வினவினான் கஷ்டத்தை மறைக்கக் கோபத்தை வரவழைத்துக் கொண்டு.

''படித்ததனால் ஏற்பட்ட தொல்லைதான் இது'' என்ற தளபதி ''படிக்காதிருந்தால் எதையும் தெரிந்ததாகக் காட்டிக் கொள்ளலாம். பிறருக்குப் புத்திகூடச் சொல்லலாம்'' என்றார்.

இதற்கு என்ன பதில் சொல்வதென்று தெரியாததால், ''என்னுடன் விளையாடுகிறீரா?'' என்று சீறினான் அனந்த்.

''உம்முடன் நான் ஏன் விளையாட வேண்டும்? அதற்குத்தான் ஒருவருக்கு இருவராக வந்திருக்கிறார்களே?'' என்று கூறி சங்கர் பந்த் கதவிலிருந்து நன்றாக வழி விட்டு நின்றார்.

அனந்த் அதன் அர்த்தத்தைப் புரிந்து கொண்டான். ஆகவே மூட்டையை அவர் கையில் திணித்து விட்டுத் திரும்பி வெளியே நடந்தான். சற்று எட்ட வந்து கொண்டிருந்த துலாஜியைச் சந்தித்து, ''வா! உன்னிருப்பிடம் போகலாம்'' என்றான்.

துலாஜி அனந்தை நோக்கி எட்ட கதவுக் கருகில் கையில் மூட்டையுடன் நின்றிருந்த தளபதியையும் நோக்கினான். அதனால் உள்ளே எழுந்த சிரிப்பை அடக்கிக்கொண்டு ''வா, தளபதி மாளிகைக்கே போவோம்'' என்று கூறி அனந்தை அழைத்துக்கொண்டு தளபதி நின்று கொண்டிருந்த இடத்துக்கு வந்தான்.

தளபதி சட்டென்று தன் கையிலிருந்த மூட்டையை அனந்தின் கையில் திணித்து

விட்டுக் கன வேகமாக மாளிகைக்குள் சென்றார். மாளிகைக் கூடத்துக்கு வந்ததும் அங்கு நிலவிய நிலை கண்டு வியந்தார். கடல் ராணியும் சாருவும் வெவ்வேறு மஞ்சத்தில் உட்கார்ந்திருந்தாலும் ஒருவரை யொருவர் பார்க்காமல் அவரவர் பக்கங்களிலிருந்த சுவர்களைப் பார்த்துக் கொண்டிருந்தனர். தான் வந்த காலடி ஓசை கேட்டும் அவர்கள் திரும்பாததைக் கண்ட தளபதி முதலில் தமது மகளைக் கண்டிக்க முற்பட்டு "ராணி! இது முறையல்ல" என்றார் சற்றுக் குரலைக் கடுமையாக்கிக் கொண்டு.

"எது?" ராணியின் அந்த ஒற்றைச் சொல் கேள்வி ஏதோ துப்பாக்கி ரவை போல் வெளிவந்தது. அவள் சுவரைப் பார்த்துக் கொண்டே அந்தக் கேள்வியைக் கேட்டதால் அதன் உஷ்ணம் மிகவும் அதிகமாயிருந்தது.

"சித்ததுர்க்கத்தில் யாரும் விருந்தினர்களை அவமதிக்கும் வழக்கமில்லை" என்றார் சங்கர் பந்த் சிறிது சீற்றத்தைக் குரலில் காட்டி.

"தாங்கள் விருந்தோம்பலைச் சிறப்பாக நடத்தலாமே. யாரும் தடை செய்யவில்லையே" என்றாள் ராணி.

சங்கர் பந்த் விழித்தார் இதற்கு என்ன பதில் சொல்வதென்று தெரியாமல். அந்தச் சமயத்தில் மூட்டை தூக்கியான அனந்தும் அவன் நண்பன் துலாஜியும் உள்ளே நுழைந்தனர். பெண்கள். இருவரும் உட்கார்ந்திருந்த நிலையில், அவர்கள் கோபத்தில், வக்ரத்தில் கூட அழகிருந்தது. "இவர்களை இப்படியே வைத்து இரு அழகிய ஓவியங்களைத் தீட்டலாம்" என்றான் துலாஜி.

"காவியமும் படைக்கலாம்" என்றார் பந்த். அதைச் சொல்லிவிட்டு, மூட்டையும் கையுமாக நின்றிருந்த அனந்தைச் சுட்டிக் காட்டி. "இவர்...." என்று ஏதோ கேட்க முற்பட்டார்.

துலாஜி இடைமறித்து "நாடக பாத்திரம்" என்றான்.

"நாடக பாத்திரமா?" என்று வியப்புடன் வினவினார் பந்த்.

"ஆம். நாடகத்தில் விதூஷகன் முக்கிய அம்சம்" என்று விளக்கினான் துலாஜி.

அந்தச் சமயத்தில் இரு பெண்களும் திரும்பி மஞ்சத்திலிருந்து எழுந்தனர். சங்கர் பந்தும் துலாஜியும் பின்வாங்கினர் கதவை நோக்கி.

அனந்த் நின்ற இடத்தில் நின்றான். கூடத்தின் கதவை யாரோ சாத்தினார்கள். இரு பெண்களும் அனந்தை நோக்கி வந்தனர். அனந்த் அசையவில்லை.

"நீங்கள் ஏன் ஓடவில்லை அவர்களைப் போல்?" என்று கேட்டாள் ராணி இகழ்ச்சியுடன்.

"ஆம். ஏன் ஓடவில்லை?" என்று சாருவும் கேட்டாள்.

"நான் வீரன்" என்றான் அனந்த்.

"அதனால்?" என்று வினவினாள் ராணி.

"எந்த ஆபத்தையும் வரவேற்பவன்" என்றான் அனந்த்.

"அப்படியா?" என்று வினவினாள் சாரு இகழ்ச்சியுடன்.



11 வயதான டிமாதி ஜோன்ஸுக்கு கான்ஸர். தொடைஎலும்பில் தோன்றிய கான்ஸரை ஆரம்பத்திலேயே கண்டுபிடித்து விட்டார்கள். பரவுவதற்கு முன் சஸ்திர சிகிச்சை செய்தார்கள். தொடை எலும்பிலிருந்து 150 மில்லி மீட்டர் கான்ஸர் பகுதியை வெட்டி எடுத்து எறிந்து விட்டார்கள். அதற்குப் பதில் காலின் கீழ்ப் பகுதியிலிருந்து வேறு ஆரோக்கியமான எலும்புப் பகுதியை வெட்டி எடுத்து இங்கு வைத்து ஒட்டுப் போட்டார்கள். அதற்கு முன் இரு பகுதிகளிலுமிருந்த ரத்த நாளங்களை ஒன்றோடொன்று இணைக்க வேண்டியிருந்தது. இந்தத்தையலுக்கு மயிரிழையை விட மெலிதான நைலான் நூல் பயன்பட்டது. மைக்கிராஸ் கோப் மூலம் பார்த்துத்தையல் போட்டனர். ஒன்றரை சென்டிமீட்டர் நீளம் கான்ஸர் பரவிய எலும்பைச் சீராக்க சஸ்திர சிகிச்சை செய்ய அமெரிக்க டாக்டர்களுக்கு பதின் மூன்றரை மணிநேரம் ஆயிற்று! 1973ல் இதே போன்ற ஒரு நோயாளிக்குக் காலையே வெட்டி எடுத்திருப்பார்கள்!

"ஆம். மரணத்தைத் துச்சமாக மதிப்பவன்" என்று விளக்கிய அனந்த் "அது மட்டுமல்ல...." என்று இழுத்தான்.

"சொல்லுங்கள்" என்றாள் ராணி.

"நரகத்திலிருந்து யாரும் ஓடிவிட முடியாது" என்றான் அனந்த்.

"நாங்கள் நரகமா?" என்று சீறி வந்தாள் சாரு.

"ஆம். தத்துவம் அப்படித்தான் சொல்கிறது" என்று கூறினான் அனந்த் வெறுப்புடன்.

அடுத்து நடந்த விசித்திரத்தைக் கதவிடுக்கின் மூலம் பார்த்த துலாஜியும் தளபதியும் "பாவம் அனந்த்" என்று பரிதாபப்பட்டார்கள். "எதற்கும் சமயம் உண்டு" என்றார் பந்த்.

"எதைச் சொல்கிறீர்கள்?" என்று கேட்டான் துலாஜி.

"இந்தச் சமயத்தில் அனந்த் தத்துவத்தைக் கொண்டு வந்திருக்கக் கூடாது" என்று கண்டித்துச் சொன்னார் பந்த். (தொடரும்)



# கறையான்கள்

குறிஞ்சிச் செல்வன்

உத்தியோகத்திலிருந்து 'ஆட்ட பாட்ட'ங்களையெல்லாம் அடக்கிவிட்டு, வீட்டுக்குத் திரும்ப இன்னும் இரண்டே இரண்டு மாதங்கள்தான் இருந்தன.

அதற்குள்... தமது கனவுகள் அனைத்தையும் நிறைவேற்றிக் கொள்ளும் வெறி அவரை ஆட்டிப் படைத்தது.

பத்து மணிக்கு அலுவலகம் என்றால் ஒன்பது மணிக்கே ஆஜராகிவிடுவார் நாயுடு. அலுவலக வேலைக்காக அல்ல; தமது சொந்த விவகாரங்களுக்காக.

'இந்த வயசில்கூட இப்படிப் பெண் லோலனாய் அலைகிறாரே' என்று அவர் காதுகளில் விழும்படி அந்த அலுவலகத்தில் உள்ளோர் கூறும் வார்த்தைகளை ஒரு காதில் வாங்கி மறு காதில் விட்டுவிடுவார். புதிதாகக் கேட்கும் வார்த்தைகளா? அல்லது பொய்யாகச் சொல்பவையா? அவர்களை எதிர்த்து வாதாட?

மேலதிகாரிகளின் 'வண்டவாளங்கள்' நாயுடுவிடம் ஸ்டாக்காக இருந்ததால் அவரை அவர்கள் 'கண்டுகொள்'வதில்லை.

நாயுடுவின் செய்கைகளை அவர்கள் கண்டு கொண்டால், அது அவர்கள் தங்களைத் தாங்களே காட்டிக் கொடுத்துக் கழுத்தை நீட்டியதாக ஆகிவிடும் என்பதால் அவர்கள் 'மூச்'சு விடுவதில்லை.

'வசந்தராணி' — பெயருக்கேற்ற அழகி.

அந்தப் பெண்ணிடம் அவரது சொற்திறமை எடுபடாமல் போனபோதும் அவர் மனம் தளரவில்லை. என்றைக்காவது ஒரு நாள் சந்தர்ப்பம் கிட்டாதா? அவர் மனம் ஏங்கித் தவித்தது.

சிகரெட் ஒன்றைப் பற்றவைத்துக்கொண்டு அலுவலகத்துக்குள் நுழைந்தபோது ''குட் மார்னிங்'' என்றாள் வசந்தராணி.

ஓநாயைத் தேடி ஆடு தனித்து வந்திருக்கிறது!

நாயுடுவின் உடம்பில் மின்சாரம் தாக்கிச் சூடேற்றியது.

என்றைக்கோ ஒரு நாள் நடந்தே ஆக வேண்டுமென்று நினைத்திருந்தது இன்றைக்கு நிறைவேறப் போகிறதா?

அவள் எதிர் பக்கத்து நாற்காலியில் உட்கார்ந்தார்.

''ராணி.. மற்றவங்க யாரும் வரல்லியா?'' ஒன்றும் தெரியாததைப் போல் கேட்டார்.

அவருடைய கால்கள் அவள் கால்களில் உரசின. வெடுக்கென எடுத்துக் கொண்டாள்.

கூர்ந்து பார்த்தார்.

நிதானமாய்ச் சொன்னார்.

''ஸ்டெல்லாவும் செல்வியும் எனக்கு என்ன ஹெல்ப் பண்ணுவாங்களோ அந்த ஹெல்பை நீயும் செய்யணும்.''

அவளின் முகம் குப்பென்று வியர்த்துக் கொட்டியது.

'எவ்வளவு பெரிய விஷயத்தை எவ்வளவு சாதாரணமாய்க் கூறிவிட்டான்.'

அவரை எரித்து விடுவதாய்ப் பார்த்தாள்.

''நீங்க.... நீங்க என்ன சொல்றீங்க....'' வார்த்தைகள் அவள் இதழ்களில் தடுமாறின.

''புதுசாவா சொல்றேன்.... அவர்கள் நான் சொல்றபடி நடந்துக்கிறாங்க. அதே மாதிரி நீயும் நடந்துக்கிட்டமன்னா எதிர்காலத்திலே உனக்குத்தான் நல்லது!'' அவர் கண்களில் வெறிப் பார்வை.

''நீங்க பார்க்கிறப்போ எங்க அப்பா மாதிரி இருக்கீங்க... இல்லேன்னா இப்ப நடக்கிறதே வேறே'' வார்த்தைகளை ஆவேசமாய் அள்ளி வீசினாள்.

நாயுடுவின் முகத்தில் ஏளனத்தின் சாயல்.

எழுந்தார்.

கதவை நாடிச் சென்றார்.

படீரென்று சாத்தித் தாழ்போடும் சத்தம். அறைக்குள் நிசப்தம். அங்கே பேரிடியே விழுந்தாலும் வெளியே கேட்காது. எல்லாம்

---

## விசித்திர மனிதர்கள்

ஹென்ரி பட் என்ற ஆங்கிலேயருக்கு மீசை வைத்திருக்கும் நபர்களைக் கண்டாலே வெறுப்பு. ஆகவே அவர் தம் சொத்துக்களையெல்லாம் தம் மகன் பெயரில் உயில் எழுதி வைத்தபோது, அவன் ஒரு நாளும் மீசையோ தாடியோ வைத்துக் கொள்ளாமலிருந்தால்தான் தன் ஆஸ்திகளை அனுபவிக்கலாம் என்றும், அவன் எப்போதாவது இடையில் மீசை வைத்துக் கொண்டால் சொத்துக்களின் மீதுள்ள உரிமையை அவன் இழந்து விடுவான் என்றும் குறிப்பிட்டிருந்தார்.

— மேனு



இமைக்கும் நேரத்தில் நடந்து முடிந்து விட்டது.

என்ன நடக்கப் போகிறது! அவள் உடல் நடுங்கியது.

அங்கே ஒரு ஹீரோ வந்து அவளைக் காப்பாற்றப் போவதில்லை.

''நீயெல்லாம் சொன்னால் கேட்க மாட்டாய்.'' அவளை நெருங்கினார்.

''பிளீஸ், என்னை ஒன்னும் செய்திடாதீங்க. உங்க மகளைப் போல என்னை நினைங்க.. நான் உங்க மகளாயிருந்து அவளுக்கு இதே மாதிரி நிலைமை ஏற்பட்டிச்சின்னு நீங்க என்ன செய்வீங்க...?'' அவளால் பேச முடியவில்லை. தொண்டை அடைத்தது. ஒரு மிருகம் தனது வெறியைத் தணித்துக்கொள்ளத் தயாராகியது.

அவளின் திமிறல்கள் ஐந்து நிமிடத்தில் அடங்கி விட்டன.

மேசையின் மீது வைக்கப் பட்டிருந்த எழுதப் படாத புதிய ஃபைலில் உடைந்த மைப்புட்டியிலிருந்து சிந்திய லெப்பு மை, கறையாய்ப் படிந்தது.



தலையை டவலால் துடைத்துக் கொண்டு வந்தா நயுடு பூஜை அறைக்குப் போகக் காலடி எடுத்துவைத்த போது வெளியே சைக்கிள் மணி ஓசை கேட்டது.

''இங்கே நாயுடுங்கிறது யாரு?'' என்று தபால்காரர் கேட்டார்.




இன்னும் கொஞ்ச காலத்துக்கு, கிராமம்' கிராமப் பஞ்சாயத்து, அம்மன் கோவில் திருவிழா இவற்றையெல்லாம் விட்டு வைக்க மாட்டார்கள்!

இப்படத்தின் மூலம் ஓர் அதிசய உண்மை உருவாகியிருக்கிறது. அதுதான் திரைக்கதை என்று ஒன்று இல்லாமலே படம் எடுக்க முடியும் என்பது!

அதிசயத்தைத் தொடர்ந்து ஓர் அதிர்ச்சி தரும் காட்சி! ஒத்தையடிப் பாதை வழியாக நடந்து போக வேண்டிய ஒரு கிராமத்துக்குத் தபால் ரன்னர் துணைக்கு வர, லேடி டாக்டர் அவசரப் பிரசவ கேஸ் பார்க்கப் போய்க் கொண்டிருக்கிறாள். அப்பொழுது ரன்னரின் காலில் முள் தைத்து அவன் கீழே விழுந்து விடுகிறான்; அந்த இளம் லேடி டாக்டர் (கிழமாயிருந்தால் யார் சிந்துவார்கள்!) கீழே அமர்ந்து, அவன் காலை எடுத்துத் தன் மடியில் வைத்துக் கொண்டு தன் பிளவுஸை இறுக்கியிருந்த பின்னைக் கழற்றி முள்ளை எடுக்கிறாள்; பின் கழற்றப்பட்டதனால் விடுபட்டு விம்மும் இரு மார்பகங்களும் ரன்னரின் பார்வைக்கு விருந்தளிக்கின்றன. ரன்னர் வியப்புணர்ச்சியுடன் பிளவுஸில் பின் குத்தி மூடச் சொல்கிறான். லேடி டாக்டர் நாணத்துடன் மார்பகங்களை மூடிக் கொள்கிறாள்.

லேடி டாக்டரை ரன்னர் காதலிப்பதற்கு முன்னால் ஒரு நல்ல 'ஸீக்வன்ஸ்' வேண்டாமா? அதற்குத்தான் இது! சீச்சீ! தமிழனுடைய கற்பனை இவ்வளவு மட்டமாகவா போக வேண்டும் என்ற அதிர்ச்சியைத் தொடர்ந்து, கொள்ளைக்காரர்கள் தலைவன், திடீரென்று ரன்னரின் தந்தையான விநோதம்! ரன்னரின் தாயார் கொள்ளைக்காரர் தலைவனை அடிக்கடி சந்திப்பது, அவனுக்குச் சாப்பாடு போடுவது ஆகிய விசித்திரங்கள்!

இசையமைப்பாளர் சங்கர் கணேஷுக்கு ஏன் இப்படி ஒரு ஆசை! ஹீரோவாக நடித்துப் படத்தையே பாழ்படுத்திவிட்டாரே! ஐயோ, பாவம்!

கதை, வசனம், டைரக்ஷன் பேராசிரியர் ஏ. எஸ். பிரகாசம். பிரகாசிக்கவில்லை!

இப்படியும் ஒரு பேராசிரியர் பண்ணலாமா? தமிழ்த் திரை உலகம் தவிக்க வேண்டும் என்று முடிவு கட்டிவிட்டாரா? என்னத்தைச் சொல்ல!

- காந்தன்

''ஆமாம்.. நான்தான் நாயுடு!'' வெளியே எட்டிப் பார்த்த நாயுடு சொன்னார்.

''தந்தி ஒண்ணு உங்க பேருக்கு வந்திருக்கு.''

''தந்தியா?'' நாயுடு பரபரப்படைந்தார். கையொப்பமிட்டுத் தந்தியை வாங்கி அவசரம் அவசரமாய்க் கிழிக்க....

''சீதாலட்சுமி சீரியஸ். உடனடியாகப் புறப்பட்டு வரவும்!''

அவர் உடல் இப்போதுதான் குளிர் நீரில் குளித்ததான நடுக்கம்.

அவர் மனைவி கௌரி அம்மாள் தந்தி வாசகத்தைக் கேட்டு 'ஓ'வென்று கதறினாள்.

என்ஜினியராய் பம்பாயில் வேலை பார்க்கும் மகனும், டாக்டருக்குப் படித்து டாக்டருக்கே வாழ்க்கைப்பட்ட மகள் சீதாலட்சுமியும் குடும்பத்தோடு கடந்த மாதம்தான் இங்கே வந்து இரண்டு வாரம் வீட்டைக் கலகலப்பாக்கி விட்டுச் சென்றிருந்தனர்.

மகளின் இரண்டு குழந்தைகளுடன் பொழுது போவதே தெரியாமல் இரண்டு வாரத்தைக் கழித்துவிட்ட கௌரியம்மாளிடம் புறப்படும்போதே மகள் சொன்னாள்:

''அம்மா... அப்பா ரிடையர் ஆனதுக்குப் பிறகு ரெண்டு பேரும் ஹைதராபாத்துக்கு எங்க வீட்டுக்கே வந்திடுங்க...''

''அப்பா ரிடையரீ ஆனதற்கப்புறமா வரச் சொல்லிட்டுப் போனியே... இப்ப சீரியஸ்னு தந்தி வந்திருக்கேம்மா...'' அந்தத் தாய் நெஞ்சில் அறைந்துகதறினாள்.

''ப்ளீஸ் என்னை ஒண்ணும்செஞ்சிடாதீங்க. உங்க மகளைப் போல என்னை நினைங்க... நான் உங்க மகளா இருந்து... அவளுக்கு இதே மாதிரி நிலைமை ஏற்பட்டுச்சன்னு நீங்க என்ன செய்வீங்க...' நாயுடுவின் காதுகளில் அந்த அபலைப் பெண்ணின் ஓலம்.

ஹைதராபாத் எக்ஸ்பிரஸ் விரைந்து கொண்டிருந்தது. அவர்கள் இருந்த பெட்டியில் 'மக்கள்' தூங்கி வழிந்தனர்.

நாயுடுவும் கௌரியம்மாளும் மனக் குமுறலுடன் அமர்ந்திருந்தார்கள். மகளைச் சென்று பார்க்கும் வரை அவர்களுக்குத் தூக்கம் வரப்போவதில்லை.

அந்த எக்ஸ்பிரஸ் காஸிபேட்டையில் நின்றபோது பொழுது விடிந்து கொண்டிருந்தது. வண்டி விழித்துக் கொண்டது.

அவருக்கு எதிர்ப்புறத்தில் அமர்ந்த நடுத்தர வயது மனிதர் கீழே இறங்கி முகத்தை அலம்பிவிட்டு அன்றையப் பேப்பருடன் திரும்பி வந்தார். பத்திரிகையைப் பிரித்தார்.

'பெண் தற்கொலை. சினிமாவுக்குச் சென்று திரும்பியபோது நடந்த நெஞ்சை உருக்கும் சம்பவம்' கொட்டை எழுத்துக்களில் செய்தி பிரசுரமாகி இருந்தது.

'இதைப் பார்த்தீங்களா சார். வர வர நாடு ரொம்பக் கெட்டுப் போயிடுச்சி...'' பத்திரிகையைப் படித்தவர் மற்றவரிடம் காட்டினார்.

அவர் படித்தார்.

'இரவு சினிமாப் பார்த்துவிட்டு கணவன், மனைவி, குழந்தைகள் இருவர் திரும்பிக்

கொண்டிருந்தபோது நான்கு பேர் அவர்களை வழி மறித்தனர். அந்தப் பெண் தனது நகைகளை யெல்லாம் கழற்றிக் கொடுத்த போதும் அவற்றை வாங்கிக் கொள்ளாது. அந்தப் பெண்ணை அன்றிரவு அவர்களுடன் அனுப்பி வைக்க வேண்டும் என்றும் காலையில் அனுப்பி விடுகிறோம் என்று அதற்கு அவர்கள் இணங்க மறுத்தால் கணவனையும் குழந்தைகளையும் கொன்றுவிட்டுப் பெண்ணைக் கடத்திப் போய்விடுவோம் என்று பய முறுத்தினார்கள். அவர்களை எதிர்க்கச் சென்ற கணவனால் அந்த நான்கு பேரையும் ஒன்றும் செய்துவிட முடியாது என்றறிந்த அந்தப் பெண் எல்லோரையும் பலியிட்டுவிடுவதை விடத் தான் ஒருத்தியே அவர்களுக்குப் பலி யாகிவிடத் துணிந்து, தனது கணவனிடம் குழந்தைகளை வீட்டுக்கு அழைத்துச் செல்லும் படியும், காலையில் தான் வந்துவிடுவதாகவும் கூறிக் கணவனையும், குழந்தைகளையும் அனுப்பி வைத்துவிட்டு அந்த முரடர்களுடன் சென்றாள். அவர்களால் கெடுக்கப்பட்ட பின் வாழப் பிடிக்காமல் வீட்டுக்குத் திரும்பி வந்து தற்கொலை செய்து கொண்டாள். இந்தச் சோக சம்பவம் ஹைதராபாத்.... என்ற இடத்தில் நேற்றிரவு நடந்தது.'

''இந்த அயோக்கியர்களை யெல்லாம் விட்டு வைச்சா பெண் பிள்ளைகள் ரோட் டிலே நடமாடக்கூட முடியாது.'' அவரின் குரலில் ஆவேசம் இருந்தது.

''இந்த மாதிரி நிகழ்ச்சி யெல்லாம் நாட் டுல சர்வ சாதாரணமாயிடுச்சு.''

கௌரியம்மாள் இப்போது கணவனைப் பார்த்தாள். அவனைப் பார்க்கும் தைரியம் நாயுடுவுக்கு இல்லை. தலையைக் குனிந்தார்.

என்றைக்கோ ஒரு நாள் அவள் அவரிடம் சொன்னாள்: ''நீங்க செய்யிற இந்தப் பாவச் செயல் நம்மைச் சும்மா விடாது. எல் லாத்தையும் நாம் அனுபவித்துத்தான் ஆகணும்.''

அவர்கள் ஹைதராபாத்தில் இறங்கிய போது அவர்களை அழைத்துச் செல்ல யாரும் ஸ்டேஷனுக்கு வந்திருக்கவில்லை.

ரிக்ஷாவைப் பிடித்து மகள் வீட்டை அடைந்தபோது அங்கே ஒரே கூட்டமாய் இருந்தது.

மாப்பிள்ளையின் தாயார் கௌரியம்மா வின் தோளைப் பிடித்துக் கொண்டு கதறினாள்:

''மருமக நம்மை ஏமாத்திட்டுப் போயி ருச்சே....''

''ஐயோ என் ராஜாத்தி... என்னை விட் டுட்டு எங்கேம்மா போயிட்டே....'' கௌரி யம்மாள் பலம் கொண்ட மட்டும் நெஞ்சில் ஓங்கி ஓங்கி அறைந்து கொண்டு அழுதாள்.

வண்டியில் வரும்போது அறிந்துகொண்ட பத்திரிகைச் செய்தியில் தற்கொலை செய்து கொண்டு இறந்துபோன பெண் தன் மகள் தான் என்பதை நேரில் பார்த்தபோது நாயுடு வின் கண்களிலிருந்து முதன் முதலாக ஒரு பெண்ணுக்காகக் கண்ணீர்த் துளிகள் தெறித்து விழுந்தன.




**நலிந்துபோன ஒலிம்பிக் பான்மை**

அட்டைப் படத்தில் குமாரி நித்யா தலை யில் அணிந்திருப்பது ஒலிம்பிக் சின்னம்மாதிரி இல்லை? ஐந்து வட்டங்கள் ஒலிம்பிக் சின்ன மாகும். நித்யா வளையல்களைத் தலை ஆபரண மாக்கியுள்ளார். காதிலும் வளையங்கள்.

இதுபற்றிக் கேட்டபோது நித்யா சொன் னார்: ''ஐந்து கண்டங்களை — அவற்றின் ஒற் றுமையை இணைத்து — ஒன்றோடொன்று இணைந்த ஐந்துவட்டங்கள் உணர்த்துவதாகக் கூறுவர். ஆனால் இப்போது ஒலிம்பிக்கில் இந்த நேச மனப்பான்மை எங்கே இருக் கிறது? தேசங்களுக்கிடையே அரசியல் விரோதங்களால் ஒலிம்பிக் மனப்பான்மை யும் பாழ்பட்டிருக்கிறது. அதுமட்டுமல்ல; ஒலிம்பிக்கில் வெற்றி பெற வேண்டும் என்ப தற்காகப் பந்தய வீரர்கள் இப்போதெல் லாம் ஊக்க மருந்து ஊசி போட்டுக் கொள் கிறார்கள்! நிற பேதம், மத பேதம் எல்லாம் புகுந்து கொண்டிருக்கிறது.

''நான் தலையில் அணிந்து கொண்டிருக் கும் இந்த வளையல்கள், காது வளையங்கள் ஆகியவை அன்பு, முழுமை, மன நிறைவு, சாந்தி, போதுமென்ற திருப்தி போன்ற நற் குணங்களைக் குறிப்பது. இவை எல்லாரிட மும் பரவ வேண்டும். உலகமே ஆனந்த மயமாய் மாற வேண்டும்!''

நித்யாவின் ஆசை நிறைவேறுவதில் நமக் கென்ன ஆட்சேபணை?

மேலட்டை வண்ணப்படம் எடுத்தவர் :
—ஹரீஷ்

'பிளீஸ் என்னை ஒண்ணும் செய்திடாதீங்க உங்க மகளைப் போல என்னை நெனைங்க... நான் உங்க மகளாக இருந்து அவளுக்கும் இதே மாதிரி நிலைமை ஏற்பட்டுச்சுன்னு நீங்க என்ன செய்வீங்க....!'

நாயுடுவின் காதுகளில் யாரோ இரும்பைப் பழுக்கக் காய்ச்சி ஊற்றினார்கள்.

அவர் மகள் சீதாலட்சுமி நிம்மதியாக மீளாத உறக்கத்தில் ஆழ்ந்து கிடந்தாள்.

# நட்சத்திர வடிவம்

## பரிசுத்திட்டம்–5.

இங்கு உள்ள துண்டங்களை ஜாக்கிரதையாக ஓரத்தை யொட்டிக் கத்தரிக்கவும். அவற்றை மேலும் பின்னப்படுத்தக் கூடாது. ஒரு வெள்ளைத் தாளில் இணைசேர்த்து ஒட்டித் திரைப்பட நட்சத்திரத்தின் உருவை முழுமையாக நீள்சதுரப் படமாகக் குறையின்றிக் காண முடிகிறதா பாருங்கள். பத்து கல்கி நேயர்கள் மட்டுமே அவ்வாறு காண முடியும். அதிர்ஷ்டசாலிகளான அந்தப் பத்துப் பேருக்கும் தலா ரூ. 25 பரிசு உண்டு. தவிர அந்தத் திரைப்பட நட்சத்திரத்தின் கையெழுத்துடன் கூடிய புகைப்படமும் அனுப்பி வைக்கப்படும். முடிவு தேதியான ஜூன் 9 தேதிக்குள் அனுப்பப்படும் உருவங்களே பரிசீலிக்கப்படும். உறையின் மேல் ''நட்சத்திர வடிவம் - 5 என்று குறிப்பிடவும். கடிதப் போக்கு வரத்துக் கிடையாது. கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது. உங்கள் விலாசத்தைத் தெளிவாக, ஒட்டப்பட்ட படத்தின் கீழே குறிப்பிட மறவாதீர்கள்!

— ஆசிரியர் கல்கி, சென்னை-32

# அழகும் தரமும் இணைந்த அரிய படைப்பு!

# புதிய பிலிப்ஸ் வாலியண்ட்

4-பாண்டு டிரான்ஸிஸ்டர்களில் சிறந்தது
ஒலித் தரமும் உயர்ந்தது!

அரிய அம்சங்கள்:

ஒலி, மற்றும் ஓசை நயத்திற்கென அழகிய கண்ட்ரோல்.

வசதியான பாண்ட் தேர்வுக்கென. டீலக்ஸ் க்ரோம் புஷ் பட்டன்கள்.

உருண்டையான குமிழ்.




ரூ.600/-*

**பிலிப்ஸ்**

*சில்லறை விற்பனை உச்ச-விலை, எக்ஸைஸ் வரி உள்ளிட்டது.
மாநில விற்பனை வரி மேலும் இதர தல வரிகள் தனி.




CASPR-727-172 TM



# லூர்து

ஜி. கிருஷ்ணன்

"லூர்து மேரி", "லூர்துசாமி" எனும் பெயர்களை நகரத்தின் நவநாகரீகங்களால் பாதிக்கப்படாத கிறிஸ்துவக் குடும்பங்களில் காணலாம். இப்பெயர் தோன்றக் காரணம் என்ன?

லூர்து என்பது பிரான்ஸ் நாட்டின் தென் கோடியில் உள்ள ஒரு புண்ணியத் தலம். இது பாரீஸிலிருந்து சுமார் 800 கி.மீ. தூரத்தில் உள்ளது. சுமார் இருபதாயிரம் மக்கள் தொகையைக் கொண்ட இவ்விடத்துக்கு ஒவ்வொரு வருடமும் சுமார் முப்பது லட்சம் யாத்திரிகர்கள் உலகின் பல பாகங்களிலிருந்தும் வருகிறார்கள். இவ்வளவு சிறிய ஊர் இப்படிப் பிரபலமடைந்திருப்பது எப்படி?

சுமார் 116 வருடங்களுக்கு முன் மேரி மாதா பெர்னாதத் என்னும் ஓர் எளிய கன்னிப் பெண்ணுக்கு இவ்வூரின் ஒரு பாறைக் குகைக்கருகே பதினெட்டு முறை காட்சி அளித்தருளினாள்.

பெர்னாதத் லூர்து வாசிகளான பெற்றோருக்குப் பிறந்த ஒன்பது குழந்தைகளில் முதல் பெண். வறுமையின் பிடியில் சிக்கி வதங்கிக் கொண்டிருந்த குடும்பம். மேலும் சோதனையாக ஒரு நாள் தகப்பனார் ஒரு விபத்தில் கண் ஒன்றை இழந்தார். அடுத்தாற்போல் தாயார் ஒரு விபத்துக்குள்ளாகி உடல் நிலை பாதிக்கப்பட்டார். வறுமையின் கொடுமை அதிகரித்தது.

1858 பிப்ரவரி மாதம் 11ம் நாள். 14 வயதான பெர்னாதத் ஆஸ்துமா வியாதியால் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தாள். தாங்க முடியாத குளிர். அனல் காயலாமென்றால் விறகு இல்லை! குளிரையும் பொருட்படுத்தாமல், இரண்டு தோழிகளுடன் பெர்னாதத் காவ் நதியோரம் சென்றாள். சிறிது நேரத்தில், க்ரோட்டோ எனப்படும் ஒரு பெரும் குகைக்கருகே வந்து சேர்ந்தனர். தோழிகள் இருவரும் ஆற்றைக் கடந்துவிட பெர்னாதத் மாத்திரம் அந்தக் குகைக்கு எதிரில் நின்று ஆற்றை எவ்வாறு கடப்பது என்று சிந்தித்துக் கொண்டிருந்தாள். அவளுக்கு உடலில் சக்தி இல்லை. அப்போது எங்கிருந்தோ ஓர் இனிமையான குரல் ஒலித்தது. திடுக்கிட்டாள் பெர்னாதத். அண்ணாந்து பார்த்தால் அவளால் தன் கண்களையே நம்ப முடியவில்லை. மாதாவின் திருஉருவம் அவள் முன் காட்சியளித்தது. தூய்மையான வெண்ணிற ஆடை, ஊதா நிற அங்கி, பாதங்கள் இரண்டிலும் மஞ்சள் நிற ரோஜாப்பூக்கள்; கையில் அதே நிற ஜபமாலை. சுற்றிலும் ஒரு தெய்வீகப் பிரகாசம்!

கை கால்கள் நடுங்க ஆரம்பித்தன பெர்னாதத்துக்கு. கைகள் ஜெப மாலையை உருட்டின. ஜபம் செய்ய ஆரம்பித்தாள். மாதாவின் திரு உருவமும் தன் கைகளால் ஜப மாலையை உருட்டிக் கொண்டிருந்தது! பெர்னாதத்தின் ஜபம் முடிந்தபோது மாதாவின் திருஉருவமும் மறைந்தது!

பிரமிப்பு நீங்கிய பெர்னாதத், தன் தோழிகளிடம் நடந்ததை விவரித்தாள். தாங்கள் அத்தகைய காட்சி எதையும் காணவில்லை, எதையும் கேட்கவும் இல்லை என்றனர். மீண்டும் அவ்விடத்துக்குப் போக வேண்டாம் என்றும் பெர்னாதத்தை எச்சரித்தனர். பெர்னாதத்தின் தாயாரும் அவ்வாறே எச்சரித்தாள். ஆனால் பெர்னாதத்தின் இதயம் ஒருவித தெய்வீக சக்தி, மீண்டும் தேவ மாதாவின் தரிசனத்துக்குச் செல்லத் தூண்டிக் கொண்டிருந்தது.

மூன்றாவது தரிசனத்தின் போதுதான் பெர்னாதத் மாதாவிடம் பேசும் பாக்கியம் பெற்றாள். மேரி மாதா பெர்னாதத்திடம், "அடுத்த இரண்டு வாரங்களுக்கு, ஒவ்வொரு நாளும் என்னிடம் வருவாயா?" என்று வினவ, பெர்னாதத் உடனே சம்மதம் தெரிவித்தாள். தான் தரிசனம் அருளிய இடத்தில் கோவில் ஒன்று எழுப்புமாறு பாதிரிகளிடம் சொல்லும்படி தேவ உருவம் கூறியது. அதன் பின் அருகே உள்ள ஊற்று ஒன்றில் வரும் நீரைப் பருகுமாறு சொல்லியது. பெர்னாதத் பல தடவைகள், திரு உருவத்தை நோக்கி, "நீங்கள் யார்" என்று கேட்டும், மாதாவின் புன்னகை தவிர ஒரு பதிலும் கிடைக்கவில்லை. கடைசி நாளன்று தன் கண்களை ஆகாயத்தை நோக்கிச் செலுத்தி, "நானே பரிசுத்தமாதா" என்று சொல்லிவிட்டு மறைந்தது அவ்வுருவம்.

கடைசி தரிசனமான 18வது தரிசனம் 1858 ஜூலை மாதம் 15ம் நாள் ஏற்பட்டது.

அடுத்த இருபது ஆண்டுகளில் பெர்னாதத் ஆழ்ந்த சோதனைக்கு ஆளாக்கப்பட்டாள். பல்வேறு பழுத்த கிறிஸ்துவ மத குருக்களின் தீவிர சோதனைக்குப் பின் மேரி மாதா பெர்னாதத்துக்குக் காட்சி தந்த உண்மை ஏற்றுக் கொள்ளப்பட்டது. மாதாவின் விருப்பத்துக்கிணங்கக் கோவில் கட்டப்பட்டது. உலகில் பல பாகங்களிலிருந்தும் வரும் யாத்திரிகர்கள் அத்தெய்வீக ஊற்று நீரைப் பருகிப் பலனடைய வசதிகள் செய்யப்பட்டன. இப்பொழுதெல்லாம் நீர் குழாய்கள் அமைக்கப்பட்டு, ஒரே நேரத்தில் பல்வேறு வரிசையாகத் தீர்த்தம் பெறும் வசதி ஏற்பட்டுள்ளது.

லூர்து ஊற்றின் தீர்த்தம் கற்பூரம் கலந்த தண்ணீரைப் போன்ற சுவையைத் தருகிறது. இத் தெய்வீக நீர் பலரின் நோய்களைக் குணப்படுத்துவதாகக் கூறப்படுகிறது. குகையின் அருகே ரொம்பவும் முடியாத நோயாளிகளை, தண்ணீரில் முழுக வைத்து எடுத்து வர குளியல் அறை ஒன்று உருவாக்கி வைத்துள்ளார்கள். கோவிலுக்குப் பக்கத்தில் சுமார் 700 படுக்கைகள் கொண்ட நோயாளி விடுதி ஒன்றுள்ளது. குளிக்க வேண்டிய நோயாளிகள் இங்கே வைக்கப்பட்டு இங்கிருந்து சிறு வண்டிகளில் குளி அறைக்கு எடுத்துச் செல்லப்படுகிறார்கள். பக்தர்கள் யாரேனும் இந் நோயாளிகளுக்கு உதவ விரும்பினால், முன்கூட்டியே அதற்கான பதிவு நிலையத்தில் தங்கள் பெயரையும், தான் தர விரும்பும் உதவியின் விவரத்தையும் கொடுக்க வேண்டும். அதன் பின், இச்சேவையாளர்களை நோயாளி விடுதிக்குள் அழைத்துச் சென்று நோயாளிகளைக் குளியலறைக்குச் சுமந்து கொண்டு போகவோ அல்லது தள்ளு வண்டிகளில் வைத்து இழுத்துக் கொண்டு செல்லவோ அனுமதிக்கிறார்கள். மிக டம்பமான உடைகளை அணிந்து கொண்டிருக்கும் செல்வந்தர்கள் கூட பக்திவசப்பட்டு இப்படித் தொண்டாற்றும் காட்சி நெஞ்சை நெகிழ்விக்கிறது. குணமடைந்த நோயாளிகள் காணிக்கையாகப் பல்வேறு சின்னங்களை விட்டுச் செல்கிறார்கள். நடக்க முடியாத நோயாளிகள், லூர்து மாதாவின் கிருபையால் குணமடைந்த பின், தாம் நோயாளியாக இருந்தபோது உபயோகித்த ஊன்று கோல்களைத் தொங்க விட்டுச் செல்கின்றனர்.

உலகப் பிரசித்தி பெற்ற லூர்து மாதாவின் சன்னிதி ஒருபுறம் இருக்க, லூர்து நகரமே இயற்கை அழகு மிக்கது. பிரான்ஸின் தென் கோடியில், ஸ்பெயினுக்கு அருகே உள்ளதால், இங்கு ஒருவித பிரஞ்சு – ஸ்பானிய கலாச்சாரத்தைக் காணலாம். இவ்வூர்வாசிகள், அன்னியர்களுடன் அன்புடன் பழகுகிறார்கள். லூர்து நகரத்தில் எங்கு பார்த்தாலும் ஓட்டல் மயம். பிரான்ஸில் ஓட்டல்கள் மிகுந்த மூன்றாவது நகரம் என்ற பெயரைப் பெற்றிருக்கிறது. உலகத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்து வந்துள்ள யாத்திரிகர்கள் பேசிக் கொள்ளும் பல்வேறு மொழிகள் கேட்பதற்கு விசித்திரமாக இருக்கும்.

லூர்தை அடைந்ததும், லூர்து மாதாவின் கோவில் எங்குள்ளது என்று கேட்டுத் தேடிச் செல்லும் அவசியமே இருக்காது. நகர்ந்து கொண்டிருக்கும் ஜனத் திரளைப் பின்பற்றினால், போதும்!

யாத்ரிகர்களும், பாதிரிமார்களும் கன்னிகா ஸ்திரீகளும், பக்தி வசப்பட்டு, மக்களுக்குத் தொண்டு செய்யும் காட்சி மனத்தைக் கவர்கிறது. மாதா கோவிலின் மேல்பக்கத்தில் உள்ள மலைப்பாதைதான் 'சிலுவையின் பாதை'. இவ்வழியில் ஏசுநாதர், மனித சமுதாயத்துக்காகச் சிலுவை தாங்கி நடந்த துயரக் கதையை வர்ணிக்கும் மாபெரும் சிலைகள் எழுப்பப்பட்டுள்ளன. இதில் வழி முழுதும் பக்தி வசப்பட்டுப் பிரார்த்தனை செய்யும் மக்களைப் பார்க்கலாம்.

லூர்துக்குப் போய் வந்த பின் ஒருவர் என்றுமே நினைத்து இன்புறும் காட்சி அங்கு மாலையில் நடக்கும் தீப ஊர்வலமே. ஆயிரக்கணக்கான மக்கள், கையில் எரியும் மெழுகு வத்தியை ஏந்திக் கொண்டு, பக்தி கீதங்களைப் பாடிய வண்ணம், மெதுவாக அசைந்து நடந்து செல்லும் காட்சி பார்ப்போர் மனத்தைப் பரவசத்தில் ஆழ்த்தும். ''போய், பாதிரிமார்களிடம், வழக்கமாக இவ்விடத்தில் ஊர்வலம் எடுக்கச் சொல்'' என்று மாதா பெர்னாதத்திடம் சொன்ன வார்த்தைகளே இவ்வூர்வலத்தின் மூல காரணம்.

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

இருட்டில் யார் வேண்டுமானாலும் எழுதலாம். ஆனால் வரிகள் நேர்நேராக இருக்குமா? பதின்மூன்று வயதான அமெரிக்க பள்ளி மாணவி பெக்கி இதற்கு வழி கண்டு பிடித்து விட்டாள். இவள் தாளில் வரைந்துள்ள கோடுகள் இருளில் ஒளிரும். இருளில் ஒளிரும் மை உபயோகித்துக் கோடுபோட்ட நோட்டுப் புத்தகங்கள் தயாரித்து விட்டால் இருட்டில் இலகுவாக எழுதக் கேட்பானேன்?






# கருகு பதில்கள்!

⌘ எல். முல்லைமணாளன், பவானிசாகர்

கே. தங்களுக்குப் பிடித்த பெண் எழுத்தாளர் யார்?

ப: ஜாய்ஸ் போர்ட்டர் என்ற ஆங்கில எழுத்தாளர். துப்பறியும் கதைகள்தான் எழுதுவார். ஆனாலும் நல்ல நகைச்சுவை இருக்கும்.

⌘ க. செல்வம், நாமக்கல்

கே. சிந்தித்த பின் செயல் புரிந்தும் தோல்வி அரக்கன் தழுவுகிறானே, ஏன்?

ப: உங்கள் சிந்தனை இன்னும் வலுவடைய வேண்டும். தெளிவடைய வேண்டும் என்று பொருள்.

⌘ எம்பிரான், சென்னை-5

கே. பணத்திற்காக என்னவெல்லாம் செய்கிறார்கள், பார்த்தீர்களா? (உங்களுக்கு எழுதுவது உட்பட)

ப: ஆமாம். உண்மையான விஷயம் (இதில் (உங்களுக்குப் பதில் எழுதுவதும் உட்படும்)




⌘ சுதா மணிமேகலை, வேலூர்

கே. ஞாபக சக்திக்கு என்ன செய்வது? ஞாபக மறதிக்கு என்ன செய்வது?

ப: ஒரு விஷயத்தில் அக்கறை, ஈடுபாடு, உண்மையான ஆர்வம் இவைகள் இருந்தால் எப்படி மறக்கும்? பத்து நாள் கழித்து சினிமா ஓசிப் பாஸ் தருகிறேன் என்றால் மறக்காமல் போய் நிற்பீர்கள் அல்லவா? ஆர்வத்தை வளர்த்துக் கொண்டால் மறதி ஏற்படாது. பலன் தரும், பயன் தரும் விஷயங்களில் ஆர்வத்தை வளர்த்துக் கொள்ளுங்கள். தானாகவே பல விஷயங்கள் உங்கள் மனத்தில் பதிந்துவிடும். (ஒரு மினி அட்வைஸ்: வாரா வாரம் 20, 30 கார்டுகள் எழுத வேண்டிய அவசியமில்லை. ஒரே காகிதத்திலும் 30 கேள்விகள் எழுதி அனுப்பலாம்.)




⌘ எம். ரமணி, கிணத்துக் கடவு

கே. என்னை ஞாபகம் உள்ளதா, நீங்களும் நானும் ஒன்றாகப் படித்தோமே? நீங்கள் கூட என்னைப் பார்த்து நிறையக் காப்பி அடித்தீர்களே!

ப: என்ன ரமணி, உன்னை மறக்க முடியுமா? உன்னைப் பார்த்துக் காப்பி அடிச்சதால் தானே எல்லா விடையும் தப்பாகப் போய் பெயில் ஆனேன்!

⌘ அ. ஹாரூன்பாஷா, நெகமம்

கே. ஒருவனை நல்ல நண்பன் என்று எங்ஙனம் கண்டறிவது?

ப: நல்ல நண்பன் என்பவன் உடல் ஆரோக் கியத்தைப் போன்றவன். இருக்கும்போது உணர முடியாது. இழந்த பிறகுதான் தெரிந்து கொள்ள முடியும். சாதாரணமாக நீங்கள் இல்லாத சமயத்தில் என்ன சொல்கிறானோ அதையே உங்கள் எதிரிலேயே சொல்பவன் நல்ல நண்பனாகக் கருதலாம்.

⌘ என். பாலு, திருச்சி-18

கே. ரயிலில் மெட்ராஸ் தாண்டி ரிசர்வேஷன் செய்தவனும் செய்யாதவனும் என்றால் பயணம் செய்ய இதைவிட தமாஷ் ஒன்று கூறுங்களேன்.

ப: இந்த நூற்றாண்டின் மிகப் பெரிய ஜோக்கைக் கூறிவிட்டு என்னை ஏன் சவாலுக்கு இழுக்கிறீர்கள்? நான் தோல்வியை ஒப்புக் கொள்கிறேன். பாலு சார்.

⌘ கு. மா. கணேசன், குப்புச்சிபாளையம்

கே. கனவுகளும் கற்பனை சக்திகளும் மனிதனுக்கு இல்லாமலிருந்தால்....

ப: உலகம் முன்னேறியிருக்காது.

⌘ த. கல்யாண ராமன், சென்னை-33

கே. உங்களிடமுள்ள கெட்ட பழக்கம் என்ன?

ப: கெட்ட பழக்கம் உள்ள மனிதன் உலகில் ஒருத்தர் கூடக் கிடையாது: நான் உட்பட (நம்பா விட்டால் நீங்கள் விசாரித்துப் பாருங்கள். யாராவது தனக்கு இன்ன கெட்ட பழக்கம் இருக்கிறது என்று சொல்கிறார்களா என்று!)

⌘ என். ராஜி, கான்பூர்-5

கே. கல்லில் நார் உரிக்கும் வேலை தருகிறேன். குவின் மேரி கல்லூரியில் இரண்டாம் ஆண்டு பி.ஏ. படிக்கும் என் பொண்ணுக்கு ஹிந்தி ஸ்காலர்ஷிப் தொகை வர வேண்டும். என்ன முயற்சி செய்தும் பணம் தரப்படவில்லை.

ப: கல்லில் நார் உரிக்க வேண்டிய வேலையாக இருக்காது. கல்லூரிக்குள் ஈரம் இருக்கும் காலம் இது. ஸ்காலர்ஷிப்சம்பந்தப்பட்ட இலாகா இனியாவது விரைவாகச் செயல்படும் என்று நம்புவோம்.

ரூ. 5 பரிசு பெறுபவர்:

**அ. ஹாரூன்பாஷா**
**54, தாராபுரம் ரோடு,**
**நெகமம்-642120**




**சீ**சுமாக, மெதுவாக அடிக்கும் தென்றல் கோபம் கொள்ளும்போது புயலாகச் சீறி விடுகிறது.

இதமாக இருக்கும் மார்கழி மாத வெயில், சித்திரை வரும்போது ஜீவனையே பிழிந்தெடுக்கிறது.

சித்திரையில் ஜிலுஜிலுவென்றிருக்கும் நீலமலைப் பனி மார்கழி வரும்போது, வாயையும் பல்லையும் ஒன்றாக்கி விடுகிறது.

அமைதியாக ஓடிக் கொண்டிருக்கும் நதி, ஆடி வெள்ளம் வரும்போது கரையேறி ஊரழிக்கிறது.

பசு சாதுவானதுதான்; மிரண்டால் காடு கொள்ளாது.

அது மனிதத்துவமோ, விஞ்ஞானமோ எதிலுமே அமைதியில் இருந்துதான் ஆவேசம் பிறக்கிறது.

துன்புறுத்தப்பட்டால் பூச்சிகூடத் தன்னைக் குத்தும் கம்பைக் கடிக்கிறது.

பருந்து பாய்ந்தால், தன் குஞ்சைக் காப்பாற்றக் கோழியும் புலியாகிறது.

நல்லவர்கள், நல்லவர்களாகவே இருப்பார்கள். ஆனால் ஆத்திரமூட்டப்படும்போது, தாங்கள் எவ்வளவு வல்லவர்கள் என்பதைக் காட்டிவிடுவார்கள்.

துன்புறுத்தப்பட்ட முனிவர் சாபம் கொடுக்கவில்லையா?

அந்த முனிவனையே ஒரு பத்தினி தாக்கி எரியவில்லையா?

'கொக்கென்று நினைத்தாயோ கொங்கணவா?' என்ற பாடல் நினைவில்லையா?

'இவன் அப்பாவி' என்பார்கள். 'பரம சாது' என்பார்கள்; சந்தர்ப்பம் வரும்போது அவனே மாவீரனாகக் காட்சியளிப்பான்.

எப்பொழுதும் நிதானமும், முக்கியமாகத் தேவைப்படும்போது அவசரமும் இருந்தால் வாழ்க்கை பயனுள்ளதாகிவிடும்.

நேத்தாஜியின் ஆத்திரம் இந்தியர்களைக் கிளப்பி விட்டது. ஆனால் முடிவு உற்சாகமாக இல்லை. ஆனால் நேருஜியின் நிதானம் இறுதிவரை இந்தியாவைக் காப்பாற்றியது.

தேவைப்பட்டாலொழியக் கோபம் கொள்ளாதே.

'வனவாசம்' என்று அறிவிக்கப்பட்டதும் ராமன் கோபம் கொண்டிருந்தால், பரதனால்லவா வணங்கத்தக்கவனாக ஆகியிருப்பான்?

சூதாட்டத்தில் தோற்றுப்போன தர்மன் அங்கேயே வாளை உருவியிருந்தால், அவனைக் கண்ணன் கூட மதித்திருக்க மாட்டானே!

காலம் பார்த்துச் சீறுவதால்தான் கருநாகத்திடம் எல்லோரும் பயப்படுகிறார்கள்.

இது தேர்தல் காலம். பலருக்குப் பசி இல்லை, தூக்கம் இல்லை. தினசரி மேடையில் நின்று ஆத்திரப்படுகிறார்கள். சவால் விடுகிறார்கள். தொண்டர்கள் ஒரு படி மேலே! 'ஒழிக' கோஷம் வானைப் பிளக்கிறது.

இந்திய ஜனநாயகம் அடர்ந்த காடுகளுக்குள்ளே அரங்கேறிக் கொண்டிருக்கிறது!

வியாபாரிகளுக்கு ஒரே அவசரம்; மூன்று மாதத்துக்குள் லட்சாபதியாக வேண்டுமாம்! ஹோட்டல்காரர்கள் ஒரே வாரத்தில் பணக்காரர்களாக வேண்டுமாம்!

நாணயம் கெட்டு, ஒழுக்கம் கெட்டு, நாக்கும் வாக்கும் கெட்ட இந்தியாவில் நாம் வாழ்ந்து கொண்டிருக்கிறோம்.

இன்னும் இருபது ஆண்டுகளில் இந்தியா எப்படி இருக்கும்? அதாவது கி. பி. 2000ல் பகலிலேயே இருட்டு வந்துவிடும். திருடன் முன்பு போலீஸ்காரர் கைகட்டி நிற்பார்.

புரட்சிக்கு முந்திய ரஷ்யா, புரட்சிக்கு முந்திய பிரான்ஸ் இந்தியாவுக்கு உதாரண நாடுகளாகி விடும்.

பழைமையின் அமைதியும், கம்பீரமும் நிதானமும் மறைந்து, புதுமையின் போலித்தனம் பெருகிவிடும்.

ஆண் — பெண்களிடம் எந்த விதப் பண்பாடும் இருக்காது.

அது கலியுகத்தின் உச்ச கட்டமாக இருக்கும்.

ஆனால் இப்போது நிதான'மாக இருக்கின்ற சிலர், அப்போது கம்பீரமாக எழுந்து நிற்பார்கள். கடுமையாகப் போராடுவார்கள். நோயாளி இந்தியா மறுமலர்ச்சி அடையும்.

இது உண்மை!

இந்தத் தலைமுறைக்கு எவ்வளவோ வேடிக்கைகள் காத்திருக்கின்றன.

ஈஸ்வரா! அதுவரை நீயும் நிதானமாகவே இரு!



Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600 032. Editor: K. Rajendran

## ஹை பவர் ஸர்ஃப் சலவை: ஒப்பற்ற வெள்ளைவெளேர் சலவை—
## அது வெட்டவெளிச்சம்.

உங்கள் மகன் துணிகளை அழுக்காக்கிக் கொள்வதில் பலே சூரனோ? அப்படியானால் உங்களுக்குத் தேவை : அழுக்கை அகற்றிட ஒரு பலே சூரன்; ஹை பவர் ஸர்ஃப்—வல்லவனுக்கு வல்லவன்.

அதிக வலுவுடைய பொருள்கள் அடங்கியது ஹை பவர் ஸர்ஃப், அதிக சலவை சக்தி: தூசி, அழுக்கு எதனையும் சுவடு தெரியாமல் அகற்றிடும். படு அழுக்கான துணிகளையும் கூட பளிச்சிட வைக்கும்.
வர்ணத் துணிகளுக்கும் உகந்தது ஸர்ஃப்—தூய்மை ஒளி மிளிர வைக்கிறது.

ஹை பவர் ஸர்ஃப்—குடும்பத்தில் உள்ள அனைவரின் துணிகளுக்கும் அதிக வெண்மை அதிக ஒளி, கேட்பானேன், வேறெந்த சலவைப் பவுடரையும் விட ஸர்ஃப் உபயோகிக்கும் தாய்மார்களே அதிகம்.






**வேறெந்த சலவைப் பவுடரையும் விட ஸர்ஃப் உபயோகிக்கும் தாய்மார்களே அதிகம்.**

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

இலங்கையில் விலை 90 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப்பதிப்பு) 75 மலேசியக் காசு